# அருள்

முருகா சரணம்





ஸ்ரீ பாலமுருகன்






தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 6 ] பரிதாவி புரட்டாசி (17-9-72) [கருணை 12

திருவருட் பிரகாச வள்ளலார்

## திருவருட்பா

அப்பா நான் வேண்டுதல் கேட்டருள் புரிதல் வேண்டும்
ஆருயிர் கட்கெல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்
எப்பாரும் எப்பதமும் எங்கணும் நான் சென்றே
எந்தை நினதருட்புகழை இயம்பியிடல் வேண்டும்
செப்பாத மேல்நிலைமேல் சுத்த சிவமார்க்கம்
திகழ்ந்தோங்க அருட்சோதி செலுத்தியிடல் வேண்டும்
தப்போது நான் செயினும் நீ பொறுத்தல் வேண்டும்
தலைவ நினைப்பிரியாத நிலைமையும் வேண்டுவனே!

---

| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

சந்தா அனுப்பவேண்டிய முகவரி:
நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், சென்னை-87.

● மேமாதம் 3, 5, 7, 11 தேதி களில் மதுரை டி.வி.எஸ் நகரிலுள்ள டி.வி.எஸ். உயர்நிலைப் பள்ளியில் இலவச கண் அறுவை சிகிச்சை நடைபெற்றது. 1148 (ஆண், பெண்) கண் நோயாளிகள் இந்த இலவச அறுவைசிகிச்சையில் கண் நலம் பெற்றனர். இந்த நல்ல காரியத்தை ஏற்பாடு செய்தவர்கள் ஏற்கனவே பல நற்பணி களுக்கு ஓசைப்படாமல் பெருந்தொகை வாரி வழங்கிய டி. வி. எஸ். நிறுவனத்தார் ஆவர்

● கணபதியை உபாஸித்து அடையும் லோகத்துக்குப் பெயர் ஆனந்தபவனம். மகாராஷ்டிர தேசத்தில்தான் கணபதி உபாஸனே அதிகம். ஆகவே பம்பாய். பக்கங்களில்தான் ஆனந்தபவனம் என்ற பெயர் வீடுகளுக்குக் கொடுக்கப்படுகிறது.

● பாம்பன் என்னும் பதியில் தோன்றிய பரமஞானி பாம்பனடிகள். பிரப்பன்வலசை என்ற ஊரில் மயானத்தில் குழிவெட்டி அதில் 35 நாள் அசையாது மெய் மறந்து உடல் நினைவின்றி இருந்து முருகனைத் தரிசித்தவர்.

● அன்னதானம் செய்யும் மனிதன் பலத்தை அடைவான். ஜயத்தை அடைவான். புகழை அடைவான். மேகம் பொழிவதனுல் பூமியில் பயிர்கள் உண்டாகின்றன. அதனுல் உலகம் வாழ்கிறது. ஆகவே அன்னதானம் செய்பவன் உயிரை ஓம்புகிருன்.

● கந்தப்பெருமானை உபாஸிக்கும் அடியார்கள் மேற்கொள்ளும் விரதங்கள் மூன்று. கார்த்திகை விரதம், சுக்கிரவார விரதம் சஷ்டிவிரதம் எனப்படும்.

● சென்ற ஜூலை 2ந்தேதி கண் நலம் பெற்ற 1148 பேர்களுக்கு டி.வி.எஸ் நிறுவனத்தால் இலவசமாக மூக்குக் கண்ணுடிகள் வழங்கப்பட்டன.

● அரைக்கீரை, அகத்திக்கீரை முளைக்கீரை, முருங்கைக்கீரை, தண்டுக்கீரை, பொன்னுங்கன்னிக்கீரை, கொத்தமல்லிக்கீரை, கருவேப்பிலை ஆகியவற்றில் வைட்டமின் சத்துக்கள் இருப்பதால் இவற்றை உணவுடன் சேர்த்துக் கொண்டால் கண் பார்வைக்கு நல்லது.

● விஷ்ணுவிடம் செய்த பாவம் பரமசிவனிடம் அழியும் பரமசிவத்திடம் செய்தபாவம் குருநாதன் கருணையினுல் அழியும் ஆனுல் குருநாதனிடம் செய்தபாவம் வஜ்ரம் போல் எப்போதும் அழியாது நிற்கும். ஆகவே குருவிடம் குற்றம் புரியக்கூடாது. குருத்துரோகம் கொடியது.

● எல்லா உயிர்களையும் தன் குழந்தைகளாகக் காண்கின்ற கருணையாளன் தான் உண்மையில் குழந்தை பெற்றவன். ஞானிகளுக்கு உலகத்திலுள்ள உயிர்கள் அனைத்தும்குழந்தைகள் 'மைந்தர் பல்லுயிரும்'என்ருர்மணிவாசகர்.

● ஒருவன் முன் ஜென்மத்தில் புண்ணியம் செய்தவனு, அல்லது

பாவம் செய்தவனு என்பதை அவனுக்கு வாய்த்திருக்கும் மனைவியைப் பார்த்தால் தெரியும்.

● கீரை, பருப்பு, காய் கனிகளில் வேண்டியசத்து இருக்கிறது மனிதனுக்கு ஏற்ற உணவு மரக்கறி உணவுதான்.

● ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்தம் மனைவியைக் கூட தாயாகப் போற்றினர். நாம் அடுத்தவர் மனைவியை யாவது தாயாக எண்ண வேண்டாமா? தாய்மையை வளர்க்க வேண்டும்.

● முன் காலத்தில் பிறர் மனைவியை இச்சித்தவன் ஒருவன்தான் இருந்தான், அவனுக்காக எழுதப்பட்டது இராமாயணம். பிறர் சொத்துக்கு ஆசைபட்டவன் ஒருவன்தான் இருந்தான். அவனுக்காக எழுதியது பாரதம். இப்பொழுது எழுத ஆரம்பித்தால் மலையாகக் குவியும்.

● அதிகாலையில் ஐந்துமணிக்கு எழுந்து சிவப்பு சூரியனையும் பௌர்ணமி அன்று சந்திரனையும் பார்த்தால் கண் நோய்கள் தீரும்.

● உயிர் பிரியும்போது காதற்ற ஊசியும் துணைக்கு வராது என்று தெரிந்த உடன் சுகபோகப் பொருள்கள் அத்தனையும் பட்டினத்தார் உதறித் தள்ளினரே தவிர மனைவி பெயருக்கோ, மற்றவர் பெயருக்கோ சொத்துக்களை செட்டில் மெண்டு பத்திரம் எழுதி வைக்கவில்லை. அதுதான் உண்மைத் துறவு.

● தூய சைவ உணவினருக்குப் பயறு, கொட்டைவகைகள் தான் தேவையான புரத சத்தைக் கொடுக்கமுடியும் அதுவும் முளைக்க வைத்தபயறு எளிதில் ஜீரணமாகும். வைட்டமின் 'ஸி' கூடுதலாகக் கிடைக்கும்.

● இவ்வுலக வாழ்க்கையிலே மக்கள் வாழ்க்கையில், பிரமச்சர்யம், இல்லரம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என நான்கு வித வாழ்க்கை முறைகளிலும் இல்லறமே சிறந்த வாழ்க்கை முறையாக விளங்குகிறது.

● குழந்தைகளைத் தொடக்கத்திலேயே தெய்வபக்தியிலும் தேசபக்தியிலும் பெற்றோர் பழக்கிவர வேண்டும்.

● இப்போது பிரபலமாகியுள்ள கண்சிகிச்சை முகாமை முதன்முதலில் 1949ஆம் ஆண்டிலேயே டி.வி.எஸ். நிறுவனம் கண்சிகிச்சை முகாமினை நடத்தியுள்ளது என்று அண்மையில், மதுரையில் டி.வி.எஸ். நிறுவனத்தார் நடத்திய கண்சிகிச்சைமுகாம் துவக்க விழாவில் பேசிய அதன் சேர்மன் உயர் திரு டி.எஸ். ராஜம் அவர்கள் அடக்கத்துடன் குறிப்பிட்டார்கள்.

● சமயம் என்பது வகுக்கப்பட்ட வழி. அதன் இலட்சியம் ஆத்மக்கியானம். சமயம் ஆத்மனை அடைவதற்குரிய வழியைக் காட்டுகிறது. ஆத்மன் எப்பொழுதும் உள்ளதாகும்.

● கடவுளின் பாஷை மௌனம் தான்.

● மஞ்சள் மங்களகரத்தையும், திருநீறு தெய்வகடாட்சத்தையும் தரும்.

● நல்ல சைவ உணவுகளையே சாப்பிட வேண்டும். மாமிசம் மக்கள் உணவன்று மாமிசம் மட்ட குணங்களைத் தரும்.

● வாலிப வயதில் கணவருக்கு அணைந்து இணைந்து விரும்பித் தொண்டு செய்வதைவிட, வயோதிகத்தில் அதிலும் நோயுற்று வருந்தும்போது முகம் கோணாமல் அவருக்குத் தொண்டாற்றுவதே உண்மையான பத்தினி தருமமாகும்.

● பிறர் சொல்லும் கடூரமான பேச்சுக்களைப் பொறுப்பதும், எந்த உயிர்களையும் கொல்லாமல் இருப்பதும்தான் விரதம்.

● நம்மைக் கெடுப்பதும் உயர்த்துவதும் நமது எண்ணம்தானே தவிர எந்த மனிதனாலும் நம்மைக் கெடுக்கமுடியாது. துரியோதனன் பாண்டவர்களைக் கொல்ல அரக்கு மாளிகையில் தீ வைத்தானே முடிந்ததா?

● சுகம் வேண்டும், கவலை நீங்க வேண்டும் என்று எல்லாரும் விரும்புகிறார்கள். ஆனால் அதற்கு மூலமான கடவுளை மறக்கிறார்கள்.

● தேகப்பயிற்சி செய்பவனுக்கு உடம்பில் ஒரு தெம்பு வருவது போல், தியானம் செய்பவனுக்கு ஆத்மசக்தி பெருகும்.

● வள்ளி பிராட்டி இச்சாசக்தி தேவசேனை கிரியாசக்தி, வேல் ஞானசக்தி, இந்த மூன்று சக்திகளை உடையவன் முருகப் பெருமான்.

● உருத்திராக்கத்தை யணிபவரை பேய், பூதம், நோய் முதலியவைகள் வருத்த மாட்டா. உருத்திராக்கமணி தரியாமல் பூஜை செய்வோர் பூஜையின் பயனைப் பெறாது ஒழிவர்.

● சென்னை மேற்கு மாம்பலத்தில் ஸ்ரீ வெங்கடாசல ஐயர் வீதியில் ஸ்ரீ வடதிருநள்ளாறு சனீஸ்வரபகவான் கோயில் உள்ளது. திருநள்ளாறு சென்றுசேவிக்க இயலாதவர்கள் இங்கு சேவிக்கலாம்.

● "தென்னாடுடைய சிவனே போற்றி! எந்நாட்டவருக்கும் இறைவா போற்றி" என்று மாணிக்கவாசகர் பாடி இருக்கிறார். தென்னாட்டவர்கள் ஈசுவர பக்தி மிகுந்தவர்கள். அதனால்தான் வேறு எந்த நாட்டிலும் இல்லாத அளவு இங்கே வானளாவிய கோபுரங்கள் நிறைந்திருக்கின்றன.

● ஆந்திராவில் உள்ள காளஹஸ்தி பஞ்சபூத க்ஷேத்திரங்களில் ஒன்று. இதுவாயு க்ஷேத்திரம். இங்கு கர்ப்பக்ருகத்தில் உள்ள தூண்டாமணி விளக்கின் தீப ஜோதி எப்பொழும் அசைந்து ஆடிக் கொண்டிருப்பதை ஞானி

கள் குண்டலினி சக்தியின் நடனம் எனக் கூறுவர்.

● ஸர்வமங்களங்களையும் அளிக்கும் வல்லமையுள்ள விரதம் சிவ ராத்திரி. இந்த நாளில் உபவாசம் இருந்து இரவில் ஸ்நானம் செய்து நமது வீட்டிலோ, கோவிலிலோ ஸ்ரீ பரமசிவனுக்கு அபிஷேகம், அர்ச்சனை, நமஸ்காரம் ஸ்தோத திரம் முதலியவற்றைப் பக்தி யுடன் செய்ய வேண்டும்.

● தானம் கொடுப்பது நல்லதே ஆனல் தானம் கேட்பவர்கள் மறுபடியும் யாசகம் கேட்கவரா மல் அவர்களுக்கு வித்யா தான மோ, மற்றொரு சக்தி உபகார தானமோ செய்து, தங்கள் ஜீவ னத்துக்கு வேண்டிய அளவு சம் பாதிக்கத் தகுந்த வல்லமையை அவர்களுக்கு உண்டு பண்ண வேண்டும். இதுதான் பெரிய தர்மம்.

● தேனில் நீர், பழச்சர்க்கரை, கரும்புச்சர்க்கரை, மற்ற பலவித தாது உப்புக்கள் வேறு சில பொ ருள்களும் கலந்துள்ளன. தினசரி ஒரு ஸ்பூன் தேனில் சிறிது தண் ணீர் சேர்த்து அருந்துவது உட லுக்கு நல்லது.

● மயிலை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் செயல்கள் இறைவழி பாடு, சமய அடிப்படையில் பொ துக் கல்வியும் கற்பித்தல், துறவி யருக்கான பயிற்சிஅளித்தல், சமய போதனை, மருத்துவத் தொண்டு மக்கள் துயர் துடைத்தல் முதலி யன.

● காஞ்சீபுரம் ஸ்ரீ காமாட்சி அம்பாள் கோவில் அருகில் உள்ள ஊரகம் உலகளந்தபெருமாளை தரிசனம் செய்தால் ராகு பிரீதி யாகும் என்பர்.

● தினசரி விடியற்காலை 5—6 மணிவரை கூட்டுப் பிரார்த்தனை தியானம், நாம ஜாபமும் காலை 6—7 மணிவரை யோகாசனப் பயிற்சியும் ராசிபுரம் சிவானந்தா பிரார்த்தனை மண்டபத்தில் நடந் துகொண்டிருக்கிறது.

● அன்னம், நெய், உப்பு, இந்த மூன்றையும் கையால் படைக்கக் கூடாது.

● சதா சலசல என்று பேசிக் கொண்டிருக்கக் கூடாது. அது பிழை. பேச்சு குறைவாகவும், செய்கை அதிகமாகவும் இருக்க வேண்டும்.

● சதா ஒலித்துக் கொண்டிருக் கிற தண்டை சிலம்பு முதலிய அணிகலன்கள் காலில் கிடக் கின்றன. மௌனமாகவுள்ள அணி கலன்கள் கழுத்திலும், தலையிலும் அணியப்படுகின்றன.

● இரவில் இஞ்சி, பாகற்காய், கஞ்சி, கட்டித்தயிர், இலைக்கறி, நெல்லிக்காய் இவைகளை உண் ணக் கூடாது. உண்டால் இலட் சுமி கடாட்சம் நீங்கும்.

● கடவுள் பாலில் நெய்போல் எங்கும் வியாபித்திருப்பினும், விக்ரகங்களில் தயிரில் நெய்போல் விளங்கி நிற்கின்றார்.

● பிரணவ ஒலி எல்லாவற்றிற்கும் முதலாவதாக விளங்குவது. ஆகையால் விநாயகரும் முதலாவதாக பூஜிக்கப்படுகிறுர்.

● ஏகநாயகன் உலகத்தைப் படைத்து அளித்து, அழிக்கக் கொண்ட மும்மூர்த்தங்களில் காத்தல் தொழிலைக் கொண்ட கடவுள் மஹாவிஷ்ணு.

● எல்லாம் வல்ல இறைவனுல் படைப்பிக்கப்பட்டு ஓர் உடம்போடு கூடி தாம் செய்த வினைகளுக்கேற்ப அநுபவம் உடையவராய், சிற்றறிவினுற் சிற்றின்பங்களை நுகர்பவராய் தமக்கொரு கடவுளை உடையவராய் இருக்கும் உயிர்களே ஆன்மாக்களாவர்.

● தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன தாவரம் என்பவை ஏழுவகைப் பிறப்புக்களாகும்.

● காலையிலும் மாலையிலும் குளித்தவுடனும், பூஜைக்கு முன்னும் சாப்பாட்டிற்கு முன்னும் ஆலய வழிபாட்டுற்கு முன்னும் விபூதி அணிதல் வேண்டும்.

● பூஜை என்பதற்கு ஞானத்தை உண்டாக்கக் கூடிய சாதனம் என்பது பொருள்.

● இன்றைக்குச் சுமார் 67 வருடங்களுக்கு முன் கொச்சி சமஸ்தானத்தில் உள்ள சித்தூரில் கார்த்திகை மாதம் சுவாதி நட்சத்திரம், கூடிய ஸோமவாரத்தன்று ருஷப லக்கனத்தில், வெளியில் பஞ்ச உத்ஸவமூர்த்திகள் பவனி வரும்பொழுது பிரதோஷ வேளையில் பிறந்தவர்தான் அம்பத்தூர் ஸ்ரீ புவனேஸ்வரி பீடத்து ஸ்ரீ சாந்த சுப்ரஹ்மணிய மௌனானந்த தீர்த்த ஸ்வாமிகள்.

● சிறியவர் தானே என்று ஒருவர் பகையையும் தேடிக் கொள்ளக் கூடாது. மிகச் சிறியவளாகிய கூனியால் சக்ரவர்த்தித் திருமகனுடைய முடி சூட்டு விழா அடியுடன் தடைப்பட்டு விட்டது.

● கங்கைநீர் சிறந்தது. அதனினும் சிறந்தது அபிஷேக நீர். அதுனினும் உயர்ந்தது, ஏழைகட்காக உழைக்கும் ஒரு உத்தமனுடைய முகத்தில் துளிக்கும் வியர்வை நீர்.

● ஒரு காரியம் புரியும்போது துணையிருப்பது நல்லது. இவன் சிறியவன் தானே என்று யாரையும் அவமதிக்கக் கூடாது. இராமர் குரங்குகளைத் துணைகொண்டு கடலை அணைகட்டி இராவண வதம் புரிந்தார்.

● தன் வாழ்வில் முப்பது லெட்சம் சம்பாதித்தாலும் அவன் இறந்தபிறகு மூன்று ரூபாய் கடுக்கனேடு கூட புதைக்க மாட்டார்கள். நீ செய்த தருமம்தான் கூட வரும்.

● முன் காலத்தில் வழிப்போக்கர்கள், ஏழைகள் தங்குவதற்காக

வீட்டிற்கு முன் திண்ணை கட்டினார்கள். இப்போது உள்ளவர்கள் வீட்டிற்குமுன் நாயைக் கட்டுகிறார்கள்.

● ஒரே மனிதன் பலவிதமான போட்டோ எடுத்துக் கொள்வது போல் ஒரே கடவுள் பலவிதமான வடிவங்களை அடியார்கள் பொருட்டு எடுத்துக் கொள்கின்றார்.

● பூமியில் அவரை வித்து ஒன்று போட்டால் அது ஆயிரம் அவரைக்காய் தருகிறது. அது போல், கடவுளுக்கு ஒரு பழம் வைத்து வணங்கினால் ஆயிரம் தருவார்.

● ஞானிகள் கோபம் மோதிரம் கழற்றுவதற்குள் மறைந்துவிடும். பாமரர் கோபம் ஜென்மம் தீரும் வரையும் மறையாது.

● இந்த உடம்பில் உயிர் இருக்கும் வரைதான் இதற்குப் பெருமை. உயிர் நீங்கி விட்டால் அரசன் முதல் ஆண்டிவரை பிணம் என்றுதான் சொல்வார்கள்.

● தன் பொருள்மேல் உண்டாகும் விருப்பத்திற்குப் பற்று என்றும், பிறர் பொருள்மீது உண்டாகும் விருப்பத்திற்கும் ஆசை என்றும், கிடையாத பொருள் மீது உண்டாகும் விருப்பத்திற்கும் பேராசை என்றும் பெயர்.

● இமயமலைச் சிகரத்திற்கு 1954ல் டென்சிங் சென்றபோது எனக்குக் காமமும், பசியும் அகன்றது என்றான். ஞானத்தின் இருப்பிடம் இமயமலை.

● மண்ணாசையும், பொன்னாசையும் மனிதனுக்குத்தான் உண்டு. பெண்ணாசை சகல உயிர்களுக்கும் உண்டு.

● இராமர் தனக்கு நாளை பட்டாபிஷேகம் என்று கேள்விப் பட்டபோது மகிழவில்லை. "இராமா நீ பதினான்கு வருடம் காட்டுக்குப்போ" என்றபோதும் அவர் துக்கப்படவில்லை. அது தான் விருப்பு வெறுப்பு அற்ற ஞான நிலையாகும்.

● சனிக்குச் சிறப்பான கோவில் உள்ள இடம் திருநள்ளாறு. நளனுக்குத் துன்பம் நீங்கிய தலமும் அதுவே. சனிப்பெயர்ச்சி நாளன்று அங்கு லெட்சக் கணக்கான மக்கள் கூடி வழிபடுவர்.

● பெரியோர்களுக்கு ஆசனமளித்தல், அவர்களை வணங்குதல் இந்த மாதிரி பெரியோர்களை வழிபடுவர்கள் நீண்ட ஆயுள், புகழ், பொருள் இவைகளை அடைவார்கள்.

● பஞ்சபூத ஸ்தலங்களில் ஒன்றான திருவானைக்காவல் மஹா உத்தமமான க்ஷேத்திரம். இங்கே பரமேசுவரர் அப்புலிங்கமாக எழுந்தருளி ஜனங்களுக்கு அருள் பரிபாலித்து வருகிறார்.

● நம்முடைய பாபங்களையும் துன்பங்களையும் போக்கிக்

கொள்ள ராமநாமத்தைவிடச் சிறந்த சாதனம் வேறில்லை. ஒழுக்கநெறிக் குறைவு, தைரிய மின்மை, ஒற்றுமையின்மை ஆகிய வற்றிலிருந்து 'ராமநாம' ஜபம் நம்மை நிச்சயம் காப்பாற்றும்.

● எலுமிச்சம்பழ விதைகளையும் உப்பையும் கலந்து அரைத்துக் குடித்துவிட்டால் தேள்கடி விஷம் இறங்கிவிடும். கடிவாயில் எலுமிச்சைப் பழரசத்தையும் உப்பையும் கலந்து போட்டால் கூட நல்லது.

● வாதம், பித்தம், சிலேத்துமம் ஆகிய மூன்றையும் சமநிலைப் படுத்தி நிலையான உடல் வளத்தைக் காப்பதற்கு நெல்லிப் பழம் தலைசிறந்தது ஆகும்.

● மருந்துகளைப் பயன் படுத்தாமல் இரத்தத்தைச் சுத்தமாக வைத்திருக்க நெல்லிக்காயைப் போல் சிறந்தது வேறில்லை.

● சன்மார்க்கி பெறுகிற ஒரே இலாபம் மரணமிலாப் பெரு வாழ்வு. அதாவது செத்துப் பிறவாத பேரின்ப முத்திநிலை. இதனை அடைவதற்கு யோகம், தவம் முதலிய கடினமான முயற்சிகள் தேவை இல்லை என்பது வள்ளலார் கண்ட சன்மார்க்க நெறி.

● அந்தக் காலத்துப் பிள்ளைகள் தாய் தந்தைகட்கு அடங்கும். இப்போது அடக்கும்.

● மற்றவன் குணம் எப்படி என்று ஆராய்வதைவிட உன் குணம் எப்படி என்று ஆராயத் தொடங்கினால் ஞானம் வரும்.

● இந்த உடம்பைவிட்டு பதினொரு வழியாக உயிர் பிரியும். அதாவது மலவழி, நீர்வழி, நாபி, வாய், மூக்குகள், கண்கள், காதுகள், கபாலம் ஆகப் பதினொன்று.

● ஜோதி இராமலிங்க அடிகள் வாடிய பயிர்களை எல்லாம் கண்டு வாடினார். நாம் துன்பப்படும் மனிதனைக் கண்டாவது இரங்க வேண்டாமா?

● எவ்வளவு உயர்ந்த சுவராக இருந்தாலும் கூரையில்லாவிடின் அதற்குக் குட்டிச் சுவர் என்று தான் பெயர். அதுபோல் எவ்வளவு செல்வமிருந்தாலும் தருமம் செய்யாவிடின் அவன் குட்டிச் சுவருக்குச் சமானம் தான்.

● மரணம் உண்டு என்று எல்லாரும் தெரிந்திருக்கிறார்கள். ஆனால் நமக்கு மரணம் இப்போது இல்லை என்று ஒவ்வொருவரும் எண்ணுகிறார்கள்.

● அண்மையில் நம் இந்திய ராணுவத்தைச் சேர்ந்த அதிகாரி ஜெனரல் திரு N. P. கண்டேத் அவர்கள். குடும்பத்துடன் பழநி மலைக்கு வந்து பயபக்தியுடன் சுவாமி கும்பிட்டார் அவருக்கு கோயிலின் சார்பில் பூர்ணகும்ப மரியாதை, பரிவட்ட மரியாதை நடந்தன.

● நமக்கு எதிரி யார் தெரியுமா? அதுதான் சந்தேகம். சந்தேகம்

கொண்டவனுடைய கை அடிக் கடி மடியிலும் சட்டைப் பையிலும் தொட்டுப் பார்த்துக் கொண்டே இருக்கும்.

● தாய் தந்தையர்கள் பழக்கம் தான் பிள்ளைகட்கும் வரும். ஆகவே குழந்தைகளுக்கு நல்ல பழக்கங்கள் உண்டாகத் தாய் தந்தையர் ஒழுக்கமாக இருக்க வேண்டும்.

● எல்லா உயிர்களிலும் இறைவன் நிறைந்திருக்கிறான் என்ற நினைவு உள்ளவன் உயிர்வதையும் புலால் உணவும் செய்யமாட்டான்.

● படிப்பிருந்தால் மட்டும் போதாது. பண்பாடு வேண்டும். பண்பாடு உள்ளவன்தான் மனிதன் எனப்படுவான்.

● அந்தக் காலத்தில் அரசர்களுக்குக் குழந்தை பிறந்தால் களஞ்சியத்தை மக்களுக்குத் திறந்து விடுவார்கள். அப்படி என்றால் முன்னே நாடு எவ்வளவு செல்வம் கொழித்திருக்கும். இப்போது ஏன் வரண்ட நாடானது.

● மணி இல்லாமல் பூஜிப்பவர் செவிடராவர். தீபம் இல்லாமல் பூஜிப்பவரும், இருட்டில் தரிசிப்பவரும் குருடராவர். கந்த புஷ்ப தூபதீப நைவேத்தியம் இல்லாமல் பூஜித்தால் அரக்கராவர்.

● கோவில் மடங்கள் வைத்துக் கொள்ளும் நிலம் சொத்துக்களுக்கு உச்சவரம்பு கொண்டு வரும் உத்தேசம் இப்போதைக்கு இல்லை தமிழக அசெம்பிளியில் அறநிலைய அமைச்சர் கண்ணப்பன் அண்மையில் தெரிவித்தார்'

● பாரதீய வித்யாபவன் 'பவன்ஸ் ஜர்னல்' என்னும் மாதப் பத்திரிகையை ஆங்கிலத்தில் வெளியிடுகிறது. விரைவில் 'பவன்ஸ் ஜர்னல்' தமிழிலும் வர இருக்கிறது.

● பாரதீய வித்யாபவன் இது வரை 178 புத்தகங்களை வெளியிட்டுள்ளது. இவற்றின் 56 லெட்சம் பிரதிகள் விற்பனையாகி உள்ளன. ரூ. 20 லெட்சம் மதிப்புள்ள புத்தகங்கள் வெளி நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளன.

● மைசூர் கவர்னர் மோகன்லால் சுகாதியா அண்மையில் காஞ்சிபுரம் வந்து ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு சங்கராச்சாரியாரை தரிசித்தார். பசுவதை தடுக்கப்பட வேண்டியதன் அவசியத்தையும், அது பற்றி நாடு முழுவதும் பிரசாரம் செய்ய வேண்டியதைப் பற்றியும் மைசூர் கவர்னரிடம் ஸ்ரீஜகத்குரு எடுத்துரைத்தார்.

● கதர் கிராமத் தொழில்களை ஆதரிப்பதன் மூலம் கடை நிலை மக்களுக்கு உதவ வேண்டியது எல்லாருடைய கடமையுமாகும் என்று காந்தி கிராமத்தில் நடைபெற்ற பிரார்த்தனை உரையில் திரு. ஜி. இராமச்சந்திரன் அவர்கள் கேட்டுக்கொண்டார்.

● வீட்டில் செய்து வரும் நித்ய பூஜையை நிறுத்திவிட்டு கோயிலுக்குச் செல்லக் கூடாது. ஒருவரைக் கெடுப்பதற்காகக் கோயிலுக்குச் செல்வதோ, அர்ச்சனை, அபிஷேகம் நடத்துவதோ அபசாரமாகும்.

# குரு



பகவான்
ஸ்ரீ ராமகிருஷ்ண
பரமஹம்ஸர்

கண்டவனும் கேட்டவனும் குரு ஆகிவிட முடியாது. பெரிய மரக்கட்டை ஒன்று நீரின் மீது மிதக்கும் பொழுது அது பிராணிகளையும் தன்மீது சுமந்து செல்ல வல்லதாகின்றது. ஆனல் ஒன்றுக்கும் உதவாத மரத்துண்டு ஒன்றோ, ஒரே மனிதன் தன்மீது உட்கார்ந்தாலும். தானும் அமிழ்ந்து போகின்றது, அம்மனிதனையும் மூழ்கடித்து விடுகின்றது ஆதலால் யுகம் தோறும் கடவுளே குருவாக அவதாரமெடுக்கின்றார். மனித இனத்துக்கு உபதேசமளிக்கவே அவர் அவதரிக்கின்றார் சச்சிதானந்தவஸ்து மட்டுமே குரு ஆகிறது.

எவன் ஒருவன் முழுமனதுடனும் பூரண உள்ளத்தினின்று வரும் பிரார்த்தனையுடனும் ஆழ்ந்த ஆவலுடனும் தானுகவே கடவுளை நெருங்க வல்லவனே அவனுக்கு குரு அவசியமாவதில்லை. ஆனல் அவ்வளவு ஆழ்ந்த ஆவல் பூண்ட ஜீவன் அதிதுர்லபமாகும். ஆகவேதான் குரு ஒருவர் அவசியமாகிறார்.

சத்குரு ஒரே ஒருவர்தான் உளார். ஆனல் உபகுருக்கள் அநேகர் இருக்கலாம். எவனொருவனிடமிருந்து நாம் எந்த ஒரு படிப்பினையையேனும் கற்கின்றோமோ அவன் ஓர் உபகுரு ஆகின்றான். பாகவதத்தில் கூறப்பட்டுள்ள தலை சிறந்த முனிவரான மகான் அவதூதருக்கு அத்தகைய உபகுருக்கள் இருபத்துநான்கு பேர்கள் இருந்தனராம்.

கடவுளைப் பற்றிய தத்துவ ரகசியங்களை அறிய நீ சிரத்தை நிறைந்தவனாக இருப்பாயாகில் அவரே சத்குருவை உனக்கு அனுப்பிவைப்பார். குரு ஒருவரைக் காணத்தேடி அலைய வேண்டிய சிரமம் உனக்கு இராது.

வைத்தியர்கள் மூவகையின ராவர் ஒருவகை வைத்தியர் கள் நோயாளியின் நாடியைப் பார்த்துவிட்டு மருந்து ஒன்றைக் கூறிமட்டும் விட்டுப்போய் விடு வர் நோயாளியின் அறையை விட்டு வெளியேறும்பொழுது 'இந்த மருந்தைச் சாப்பிடு' என்று மட்டும் நோயாளியிடம் சொல்லி விரைந்து விடுவர். இத் தகையவர்கள் வைத்தியர்களுள் மிக அதமர்கள் ஆவர். அதே போன்று உபதேசத்தை மட்டும் உரைத்து அத்துடன் நின்று விடும் குருக்கள் உள்ளனர். தம்முடைய போதனைகளால் நற்பயன் உண்டாயிற்ரு தீய பயன் ஏற்பட்டதாஎன்று கண்டு கொள்ள அவர்கள் நிதானிப்ப தில்லை சீடனைப் பற்றி அவர்கள் நினைப்பதே இல்லை.

வேறொரு வகையினரான வைத்தியர்கள் உள்ளனர் அவர்கள் மருந்து இன்னதென் பதைக் கூறி அதை உட் கொள்ளுமாறு நோயாளியை வேண்டுவர் தாம் கூறியவாறு செய்ய நோயாளி விருப்பமுரு விடின் அவர்கள் அவனுடன் பேசி நல்லதெது என்பதை அவ னுக்கு விளங்கவைப்பர். இவர் கள் மத்தியமமான வைத்தியர் கள் ஆவர். அதேபோன்று மத்தியமமான உபதேசகர்கள் உள்ளனர். அவர்கள் சீடனுக்கு உபதேசம் செய்து, அதற்கும் மேலாக அந்த உபதேசத்தை யொட்டி அவன் நடக்குமாறு செய்யப்பல வழிகளில் அவனைத் தூண்டுவதற்கு முயலுவர்.

கடைசியாக, உத்தம வகை யினரான வைத்தியர்கள் உள்ள னர். அவர்களுடைய மிருது வான தூண்டுதலுக்கு நோயாளி இணங்கிவராவிடில் அவர்கள் அவனை வலியவும் பணிய வைக் கச் செய்வர். அவசியமாயின் நோயாளியின் மார்பின்மீது முழங்கால்களை வைத்து அமுத் தியவாறு அவனுடைய தொண் டைக்குள்ளே மருந்தைச் செலுத் தியே தீருவர். அதே போன்று உத்தம வகையினரான போத கர்கள் உள்ளனர். மாணுக்க னுடைய மனதை இறைவன் பால் திருப்ப அவர்கள் வன் முறையையும்கூடப் பயன்படுத் துவர்.

ஆனுல் மருந்தானது நோயா ளியின் வாயினின்றும் வழிந்து வெளியோடி, அவனுடைய வயிற்றினுள் போய்ச் சேராது நின்று விட்டால், வைத்தியர் தான் என்ன செய்வார்? அத்த கையவர் விஷயத்தில் அதி சூர ரான வைத்தியரும் ஒன்றும் செய்யமுடியாது போகும்.

புதிய தேசம் ஒன்றுக்குப் போகும் பொழுது, வழிதெரித்த வழிகாட்டி ஒருவனுடைய சொற் படி இயங்கவேண்டும். பலரு டைய யோசனையைக் கேட்டு நடக்கத் தொடங்கினேமாயின் எல்லாம் குழப்பத்தில் போய் முடிவுறும். அவ்வாறே கடவுளை

அடைய முயலும் விஷயத்தில் கடவுளுக்கு இட்டுச் செல்லும் நெறியறிந்த ஒரே ஒரு குருவினுடைய புத்திமதியை அப்படியே பின்பற்ற வேண்டும்.

குருவினுடைய மொழி மீது நம்பிக்கை கொள்ள வேண்டும். குரு ஆனவர் சச்சிதானந்தப் பொருளே யன்றி வேறல்லர். கடவுளே குரு ஆகின்ருர். குழந்தை போன்று குருவினுடைய கூற்றினை முற்றிலும் நம்பினுல்தான் நீ கடவுள் சாக்ஷாத்காரம் பெறுவாய். குழந்தைக்குதான் என்ன விசுவாசம்உளது பாருங்கள்! ஏதோ ஒரு மனிதனைப் பற்றித் தாயார் குழந்தையிடம் 'அவன் உன்னுடைய அண்ணன்' என்று கூறிவிட்டால் அவனை உண்மையிலேயே அண்ணன் என்றே குழந்தை நம்புகின்றது. நூற்றுக்கு நூறு மட்டுமின்றி, நூற்றுக்கு நூற்று இருபத்தைந்து என்ற விகிதத்தில் குழந்தை நம்பிக்கை கொள்ளுகின்றது. குழந்தை பிராமணன் ஒருவனுடைய மகனுகவும் அந்த மனிதன் ஒரு கொல்லன் மகனுகவும் இருக்கலாம். ஆனுல் குழந்தை அவ்வாறு நம்பவே செய்கிறது.

முத்தினை எடுத்துக்கொண்டு முத்துச் சிப்பியை எறிந்துவிடு. குரு உனக்கு அளித்தருளிய மந்திரத்தின்மீது தியானம்செய். குருவினுடைய மானுட இயல்பில் இருக்கக் கூடிய தோஷங்களைப் பொருட்படுத்தாது விடு. உனது குருவை நிந்திப்போருக்குச் செவி சாய்க்காதே. உன் தந்தையினும் தாயினும் சிறப்பு மிக்கவர் ஆவார் குரு. உன் முன்னிலையிலேயே உன் தந்தையும் அன்னையும் அவமானப்படுத்தப் படுவராகில் நீ சும்மா இருப்பாயா? அவசியமானுல் போரிட்டும் கூட, உனது குருவின் மானமதிப்பைக் காப்பாற்றுவாயாக.

விசுவாசமும் அன்பும் இன்றியமையாதனவாகும். விசுவாசம் என்பது எவ்வளவு வலிவுடையது என்று சொல்லுகிறேன், கேள். இலங்கையினின்று பாரதத்துக்குக் கடல் கடந்து வருவதற்கு ஒரு மனிதன் முற்பட்ட வண்ணமிருந்தான். விபீஷணர் அவனைப் பார்த்து 'நீ உடுத்தியுள்ள வேஷ்டியின் ஒருநுனியில் இதை முடிச்சலிட்டு வைத்துக் கொள். நீ பத்திரமாகக் கடலைக் கடந்து விடுவாய். நீரின் மீது நடந்து செல்லுவது உனக்கு இயலும். ஆனுல் முடிந்து வைத்துள்ள பொருளைச் சோதித்து மட்டும் பார்க்காதே, நிச்சயமாக அவ்வாறு செய்யாதே அவ்வாறு செய்தாயோ நீ மூழ்கிப் போவாய்' என்று கூறினுர். அம் மனிதனும் அவ்வாறே எளிதாகக் கடல் நீரின்மீது நடந்து சென்ருன். விசுவாசத்தின் வலிமை அத்தகையதாகும் ஆனுல் கொஞ்ச தூரம் சென்ற பிறகு அவன் 'விபீஷணர் எனக்குத் தந்துள்ள இந்த அபூர்வவஸ்து

தான் என்னவாயிருக்கும், நீரின் மீது நடப்பதும் எனக்குச் சாத்தியமாயுள்ளதே!' என்று எண்ணியவனாய், முடிச்சை அவிழ்த்துப் பார்க்க, இராமருடைய திருநாமம் எழுதப் பெற்ற ஓர் ஓலையையே கண்டான். 'இவ்வளவு தானா இது!' என்று அவன் நினைக்க, மறுகணமே கடலில் மூழ்கிப் போனான்.

மக்கள் கூறும் பழமொழி ஒன்று உளது. இராம நாமத்தில் தனக்கு இருந்த விசுவாசத்தின் மூலம் அனுமான் கடலைத் தாண்டி மறு கரை சேர்ந்து விட்டார். ஆனால் இராமனே கூட சேது ஒன்றை நிறுவ வேண்டியதாயிற்று என்று அப் பழமொழி கூறும்.



# உடல் என்னும் ஆத்மக்கோயில்



மகாத்மா காந்திஜி

ஆரோக்கியமாக இருப்பது என்ருல் உடம்பு சௌக்யமாக இருப்பது என்று அர்த்தம். எவ் வித நோயுமில்லாமல் இருப்பவன் ஆரோக்கியமான மனிதன். அவன் தன் நித்தியக் கடமைகளைச் சளைக் காமல் செய்வான்... சாதாரண மாகச் சரீர உழைப்பினுல் களைப்பு அடையாதவனுகவும் இருப்பான். அவன் சாதாரணமான எளிய உணவை ஜீரணித்துவிடுவான். அவனுடைய உள்ளமும் புலன் களும் ஒருவழிப்பட்டு நிதா னத்தோடு இருக்கும்... அதிகமான தேக பலம் படைத்த ஒருமனிதன் ஆரோக்கியமும் உள்ளவனுகத் தான் இருப்பான் என்ற அவசியம் இல்லை.

முற்காலத் தத்துவ ஞானிகள் விவரித்துள்ளபடி, மனித உடம்பு பஞ்சபூதங்களால் ஆனது. அவை யாவன மண், நீர், ஆகாயம், ஒளி, காற்று. பத்து இந்திரியங்களைத் துணைகளாகக் கொண்டு மனி தனின் நடவடிக்கைகள் அனைத் தையும் உள்ளம் நிகழ்த்துகிறது. கை, கால், வாய், ஆசனத் துவா ரம், ஜனனேந்திரியங்கள் ஆகிய ஐந்தும் கருமேந்திரியங்களாகும். தொடுவதை அறியும் தோல், வாசனையை அறியும் மூக்கு, சுவையை அறியும் நாக்கு, பார்க் கின்ற கண்கள், கேட்கின்ற காது கள் ஆகிய ஐந்தும் ஞானேந்திரியங் கள்.

சிந்தனை என்பது உள்ளத்தின் செயல். ஆகவே உள்ளத்தையும் பதினொன்ருவது இந்திரியம் என்று சிலர் கூறியிருக்கிருர்கள். ஆரோக் கியத்துடன் இருக்கும் போது எல்லா இந்திரியங்களும் உள்ள மும் ஒன்ருேடொன்று பூரணமாக இணைந்து வேலை செய்யும்.

மனித இயந்திரத்தின் உள் அமைப்பு ஆச்சரியகரமான தாகும். பிரபஞ்சத்தின் சின்னஞ் சிறு வடிவமே மனித சரீரம் என்பது. உடம்பில் காண முடி யாத எதையும் பிரபஞ்சத்தில் காணமுடியாது. அதனுல்தான் உள்ளே இருக்கும் பிரபஞ்சம் வெளியில் உள்ள பிரபஞ்சத்தைப் பிரதிபலிப்பதாகத் தத்துவ ஞானிகள் சித்தாந்தம் செய்திருக் கிருர்கள்.

ஆகவே, நம் சரீரத்தைப் பற்றி நாம் பூரணமாக அறிந்திருந்தால், பிரபஞ்சத்தைப் பற்றியும் அறிந்தவர்களாகிறோம்.

முக்கியமான உறுப்புக்களில் ஒன்று பழுதுபட்டிருந்தாலும் இயந்திரம் நின்றுவிடும். உதாரணமாக, சரியாக ஜீரணம் ஆகாவிட்டால், உடம்பு முழுவதுமே மந்த நிலையை அடைந்துவிடும். ஆகையால், அஜீரணத்தையும் மலச் சிக்கலையும் அலட்சியமாகக் கருதுகிறவன் ஆரோக்கிய விதிகளின் அரிச்சுவடியைக்கூட அறியாதவனே. எண்ணற்ற நோய்களுக்கு எல்லாம் இந்த இரண்டும் தான் அடிப்படைக் காரணங்கள்.

மனிதன் உலகத்தில் பிறந்ததற்குக் காரணம், உலகத்துக்குப் பட்டிருக்கும் கடனைத் தீர்ப்பதற்காகத்தான். அதாவது கடவுளுக்கும், அவருடைய சிருஷ்டிக்கும் சேவை செய்ய (அல்லது அவரது சிருஷ்டிக்குச் சேவை செய்வதன் மூலம் அவருக்குச் சேவை செய்யவே) பிறந்திருக்கிறான்... எங்கும் நிறைந்த பரமாத்மாவின் அல்லது கடவுளின் ஒரு பகுதியே மனித ஆத்மா.

இந்த ஆத்மத் தொடர்பை அடையும் முயற்சியில் நம்முடைய எல்லா நடவடிக்கைகளும் ஈடுபட்டிருந்தால், உடம்பானது ஆத்மா குடிகொண்டிருப்பதற்கு ஏற்ற கோவிலாகிறது. இந்தக் கருத்தைத் தன் முன்னால் வைத்துக் கொண்டு, மனிதன் தனது சரீரத்தின் பாதுகாவலனாகச் செயல் புரிய வேண்டும். சரீரம் தன்னால் முடிந்தமட்டும் சேவை இலட்சியத்தைக் கைக்கொண்டு உழைக்கக் கூடிய வகையில் அதைப் பேணுவது அவனுடைய கடமையாகிறது.



# கண் திறக்கவேண்டும்

இன்று நமக்கு வேண்டுவது என்ன? விஞ்ஞான அறிவிலோ, அரசியல் ஞானத்திலோ, பொருளாதார முன்னேற்றத்திலோ, விவசாய முறைகளிலோ, வியாபாரத் துறைகளிலோ நாம் நம் மூதாதைகளைவிட எவ்வளவோ முன்னேறியிருக்கிறோம்.

நம்மிடையே வழங்கும் புத்தகங்களுக்கும் பத்திரிகைகளுக்கும் அளவேயில்லை. ஆனால் நாம் மனச் சாந்தியும் சந்தோஷமும் அடைந்திருக்கிறோமா? நமக்குப் பின் வாழப் போகும் நம் குழந்தைகளுக்காவது சுகத்தை நாம் தேடி வைத்திருக்கிறோமா? இக் கேள்விகளை ஒவ்வொருவரும் தம்மைக் கேட்டுக் கொள்வார்களாக. நம்மையே நாம் ஏமாற்றிக்கொள்ள விரும்பினலல்லாமல் இக் கேள்விகளுக்கு விடை 'இல்லை' என்றே பெரும்பாலும் வரும். இந்நிலைக்குக் காரணம் என்ன? மனிதனின் மனம் புதிய நாகரிகத்தின் உறைப்பால் மிகவும் சுருங்கி விட்டது. அவனுடைய திருஷ்டி மிகவும் குறுகி விட்டது. தன்னலமே அவன் மனம், ஹிருதயம் ஆகியவற்றைப் பிடித்துக் கொண்டு, அவன் நினைப்பெல்லாம் தன்னையும் தனக்கு மிக அருகிலுள்ளவர்களையும் பற்றியே உண்டாகிறது. எங்குமாய் எல்லாமுமாய் விளங்கும் ஈசுவரன் அவன் கண்களுக்குப் புலப்பட வில்லை.

இதுதான் இக்கால மனிதனின் சுகக் கேட்டுக்கும் சந்தோஷக் குறைவுக்கும் காரணம். ஆகவே இன்று வேண்டுவது நம் கண் திறப்பே.

உண்மையைக் காணக் கண் திறக்க வேண்டும். 'எல்லா உயிர்களும் ஒன்றே; எவற்றிலும் காணப்படுவது ஒரு பொருளே. உடல் வேற்றுமையால் உயிர் வேற்றுமை கொள்ளலாகாது' என்பது உண்மைகளுட் சிறந்த உண்மையாகும். இதனைக் காண்பது இலகுவான தன்று. அஞ்ஞான மூட்டத்தால் நாம் வேற்றுமை மட்டும் காண்கிறோமேயன்றி ஒற்றுமையைக் காண்பதில்லை. சிறியது முதல் பெரியது வரையிலுள்ள எல்லா ஜீவராசிகளும் நம் கண்ணோட்டத்துக்கு உரியவை. அவற்றின் தெய்வீகத் தன்மையை அறிந்து நடந்து கொள்வதே அறிவுடைமை யாகும்.

நம்மைச் சுற்றிலும் உள்ள மனிதர்களில் எத்தனை பேர் எத்தனை விதமான துக்கங்களுக்கு ஆளாகி, அவற்றினின்று கரை

யேர வழி காணுமல் தவிக்கிருர் கள். அறியாமை, வறுமை, நோய், கொடுமை ஆகிய பலவகைத் துன் பங்கள் நம் மக்களை வாட்டுகின் றன. வைத்திய சாலைகள், சிறைச் சாலைகள், ஏழை விடுதிகள், அநாதை விடுதிகள், பெற்ருே ரிழந்த பிள்ளைகளின் விடுதிகள், கைம் பெண்களின் இரட்சிப்பு விடுதிகள், பிச்சைக்காரர் இடங் கள் என்று இத்தகைய தர்மஸ் தாபனங்கள் நம்தேசத்தில் சிற்சில எழுந்து கொண்டு வருகின்றன. அங்கெல்லாம் மக்கள் படும் துன் பங்களைக் கண்டு சகித்தல் முடி யாத காரியம். இம் மாதிரியான அநாதை விடுதிகள் மேல் நாடு களில் மிக நேர்மையாக நடந்து வருகின்றன என்று சொல்லுகிருர் கள்.

நம் தேசாசாரம் வேறு. தர்மம் பிறந்த பூமி பாரதம். இங்கு ஒவ்வொரு மனிதனும் பரோப காரியாய் விளங்கவும், ஒவ்வொரு வீடும் அன்ன சத்திரமாய் விளங் கவும், ஒவ்வொரு சமூகமும் சமூ கத்தொண்டு செய்யவும் வழிகள் வகுக்கப்பட்டிருந்தன. தர்மங்கள் முப்பத்திரண்டு என வரையறுக் கப்பட்டு அவை எவராலும் தம் தம் சக்திக்கு ஏற்றபடி அனுஷ் டிக்கப்பட்டு வந்தன. இன்ருே நாம் பழமையையும் விட்டுப் புதுமையையும் ஏற்றுக் கொள்ள மாட்டாத நிலையில் இருக்கிருேம்.

நாம் செய்ய வேண்டுவது என்ன? ஒரே சொல்லில் சொல்ல வேண்டுமானுல், துக்கம் எங்கே உண்டோ, அங்கு நாமே வலுவில் சென்று, அத் துக்க நிவர்த்திக்கு ஆகக் கூடியதை செய்ய முயல வேண்டியது. அதனோடு, பிறருக்கு நல்லது என்று கருதக்கூடிய எதை யும் அவர்கள் அழைப்பில்லாமலே நாம் வலுவிலே சென்று அமைத் துக் கொடுப்பது. இந்த இரண்டு முறைகளே ஜீவாத்ம கைங்கர்ய முறைகள்.

ஜீவாத்ம கைங்கர்யம் செய் வதில் மனமுள்ள ஒவ்வொருவரும் கவனிக்க வேண்டியவை சில உண்டு. அவற்றுள் முதலாவது ஜீவன்களின் ஈசுவரத் தன்மையை உண்மையாக அறிவது. இது நல்ல படிப்பாலும், ஆழ்ந்த சிந் தனையாலும், குருவின் கடாக்ஷத் தாலுமே நிகழும். 'எல்லா உயிர் களிடமும் ஈசுவரனே காணப்படு கிருன்' என்ற உண்மை அடிக்கடி அதனை எண்ணி எண்ணி உணர் வதால் அறியப்படும்.

தேவாரம், திருவாசகம், ஆழ் வார் பாடல்கள், நீதி நூல்கள், புராணங்கள், இதிகாசங்கள் ஆகிய யாவும் இவ்வுண்மையயே போதிக்கின்றன. இது ஸத்யத் துள் ஸத்தியமானது என்ருலும், இதனை உள்ளபடி அனுஷ்ப்பது கடினமாதலால், அறிவினுலாவது இதனை நம்பி, இதன்படி நடப்பது புண்ணியமாகும் என்று எண்ண வேண்டும்.

அடுத்ததாக இக் கைங்கர்யம் செய்ய எண்ணும்போது 'நாம்' என்ற எண்ணம் அகல வேண்டும். "பள்ளத்தில் பாய்வது நீரின் கடமை. அதைப்போல் பரோப காரம் நம் கடமை. கடமையைச் செய்வதில் பெருமை ஏது?" என்ற மனுேபாவம் உண்டாக வேண் டும். கடமையைச் செய்யாதது பாபம் என்றும், பரோபகாரம் செய்யாமல் வாளா இருப்பது பாபம் என்றும் நாம் எண்ண வேண்டும்.

மூன்ருவதாக, இக் கைங்கரியத் திற்குக் கூட்டு முயற்சி வேண்டும் எனபதில்லை. ஒருவர் தமக்குகந்த ஒரு துறையில் தம்மாலானதை ஓசைபபடாமல் செய்து வருவதே போதுமானது. தமமைப் போலவே ஒத்த உணர்ச்சியும், ஊக்கமும் உடைய சிலர் ஒன்று சேரக் கூடுமானுல் அவ்வாறு சேர்ந்து, கூட்டத்தில் ஒவ்வொரு

வர் இன்னது செய்வது என்று நிர்ணயித்துக் கொண்டு முயல்வதும் நன்மையாகும். எதற்கும் முக்கியமாக வேண்டியவை நன்மனமும், உறுதியுடையமையும், இடையருது தொடர்ந்து முயற்சியுமேயாகும்.

ஸ்ரீ. ம. தர்மத்தொண்டுச் சபை நாம் ஒவ்வொருவரும் ஆராய வேண்டிய பல அருமையான விஷயங்களைத் தொகுத்துச் சுட்டிக் காட்டி வருகிறது.

அநாதப் பிரதேச சம்ஸ்காரம்.

இறக்கும் தருவாயிலிருக்கும் ஏழை எளியவர்கள் நற்கதி அடையச் செய்யும் வழிகள்.

வைத்திய சாலைகளிலுள்ள நோயாளிகளுக்கு உதவி புரிதல்.

அநாதைக் குழந்தைகளைப் பராமரித்தல்.

சிறைச்சாலையில் அடைபட்டிருக்கும் குற்றவாளிகளுக்கு ஆறுதலாக உபதேசம் செய்தல்.

திக்கற்ற ஏழைகளின் மனத் துயரை அகற்ற வழிகளை வகுத்தல்.

பிராணி வதையைத் தடுத்தல்.

பசுக்களை வளர்த்தல்.

பசியால் வாடும் மக்களுக்கும், பிச்சைக்காரர்கள், நோயாளிகள் ஆகியோரின் துக்க நிலையை அவர்கள் ஒருவாறு சமாளித்துக் கொள்வதற்குரிய வழிகளை நாடுதல்.

மேலே காட்டியவை நம்மைச் சுற்றிக் காணும் பல வகை ஜீவத் துன்பங்களைக் குறித்தவையாகும். இவை முடிநத ஜாபிதாவும் அன்று. இத்துன்பங்களைத் தீர்ப்பது சாத்தியமா என்ற ஒரு கேள்வி எழலாம். ஐரோப்பா அமெரிக்கா முதலிய நாடுகளில் இவற்றை அரசியல் முறையில் தீர்க்கப் பெரிய சாதனங்களைக் கையாண்டு வருகிறார்கள். பிரபுக்களும், மடங்களும், பல சமூக சேவை நிலையங்களை ஸ்தாபித்துச் செவ்வையாய் நடத்தி வருகிறார்கள். இந்தியாவிலும் இந்துக்கள் அல்லாத பிற மதத்தினர் தங்கள் தங்கள் இனத்தவர்க்கு இம்மாதிரியான ஜீவாத்ம கைங்கரிய காரியங்களைச் செம்மையாக அமைத்து நடத்தி வருகிறார்கள். அவர்களின் கைங்கரிய ஸ்தாபனங்களின் மூலமாக இந்துக்களிற் பல்லாயிரக் கணக்கானவர்களைப் பிற மதங்கள் தம்பால் சேர்த்துக் கொண்டதும் உண்டு.

நம்மிடத்தில் ஜீவாத்ம கைங்கரியங்கள் முன் காலத்தில் ஸ்தாபனங்களாக நடை பெறவில்லை என்றாலும் ஒவ்வொருவனுடைய அன்றாட கடமைகளாக அமைந்திருந்தன. 'தனக்கென வாழாப் பிறர்க் குரியாளனாக' வாழ்வதே புத்தியுள்ள ஒவ்வொருவனுடைய இலக்ஷியமாக இருந்தது. அந்நிலை திரும்பியும் வரவேண்டும். அது படிப்பாலாவது பிரசாரத்தாலாவது வராது. இந்தவிஷயத்தில் சிரத்தையுள்ளவர்கள் மிகச் சிலராகவே தொடக்கத்தில் இருக்கக் கூடும். அப்படிப் பட்ட சிலரும் தைரியமாகச் செயல் முறையில் இறங்க வேண்டும்.

உதாரணமாக, இறக்கும் தருணத்தில் இருக்கும் ஏழைகளுக்குத் தமமால் முடிந்த வரையில ஆறுதல் சொல்லும் கைங்கரியம் செய்வதைத் தம் கைங்கரியமாக ஒருவர் எடுத்துக்கொள்கிறார் என்று வைத்துக்கொள்வோம். அவர் தாம் உபகரிக்க எண்ணும் பிரதேசத்தை முதலில் குறிததுக் கொள்ளட்டும். தம் ஊரிலோ, அல்லது தம் இருப்பிடத்திற்கு அருகிலுள்ள சில சேரிகளையோ தெருக்களையோ தம் தொழிலுக்குத் தகுந்த இடமாகத் தேர்ந்துகொள்ளலாம். தருமத்தொண்டு

சபையிலிருந்து வந்த பத்திரிகைச் செய்தியை அந்தப் பிரதேசத்தி லுள்ள ஒவ்வொரு வீட்டாருக்கும் தெரிவிக்க வழிகளை நாடவேண் டும்.

அந்த ஊர் மக்களை ஏதேனும் கதை, புராணம் என்ற வியாஜத் தால் கூட்டி அங்கே பத்திரிகை யின் விஷயத்தை அவர்கள் மனத் தில் படும்படும் சொல்லலாம். எவருக்கும் சாவைக் கண்டால் அச்சமே. ஆயுள் முழுமையும் நாஸ்திகனய் இருந்திருப்பவன் கூடத்தான் சாகும்போது நல்ல நினைப்போடும், தியானத்தோடும் சாக விரும்புவான். ஆகவே, வில்வம், விபூதி ப்ரசாதம், கங்கா ஜலம் ஈசுவர நாம பஜனை முத லானவற்றை அவன் ஏற்றுக் கொள்ள விரும்புவான்.

அவன் அருகிலிருப்பவர்களும் யாதொரு பணச் சிலவும் இல்லா மல் செய்யக்கூடிய இக் கைங்கரி யங்களைச் செய்ய முன் வருவார் கள். மேலே சொன்ன பிரசாதங் கள் தம்மிடத்தில் இருப்பதாக வும் வேண்டியவர்கள் வேண்டிய காலத்தில் அவற்றைப் பெற்றுக் கொள்ளலாம் என்றும் அறிவித்து விட்டால் மக்கள் அச் செய்தியை ஆவலுடன் ஏற்றுக் கொள்வார் கள்.

சிற்சில சமயங்களில் நாமே நேரிற் சென்று இக் கைங்கரியங் களைச் செய்யவேண்டும். இவற் றைச் சொல்லும்போதும் செய் யும் போதும் நாம் "பெரியவர்; உபகாரம் செய்கிறேம்" என்ற மமதை சிறிதும் காட்டாமல், யாதொரு பிரதிப்பிரயோஜனத் தையும் கருதாமல், தொண்டு செய்வதே பயனென எண்ணிச் செய்யவேண்டும்.

மேலே ஓர் உதாரணம் கொடுக் கப்பட்டது, இதைப் போலவே தான் ஒவ்வொரு கைங்கரியமும்.

இவற்றைச்செய்து நாம் பிறப் பெடுத்ததின் பயனைப் பெற நம் மில் சிலருக்கேனும் கண் திறக்குமா?

— நன்றி ஸ்ரீ காமகோடிப்ரதீபம்.

---

# ஸ்ரீ சாந்தானந்தர்

## அருள்வாக்கு



ஸ்ரீ ஸத்குருவின் திருவடித் தியானம் அஞ்ஞானமாகிற துஷ்டகிரஹத்தைச் சமனம் செய்து விடும்.

ஈசன் சொரூபமாக அனைத்தையும் காண்பதே உனது லட்சியமாகிவிட வேண்டும்.

குருவையும், தெய்வத்தையும் அவமதித்தவன் சண்டாளனாவான்.

கடவுளைச் சரணமடைந்தவனின், முன்செய்த பாவங்கள் வெந்து சாம்பலாகிப்போகும்.

கடவுளின் தோற்றமே உலகம். மறந்து விடாதே.

பாவிக்கு உலகப்பற்று அதிகரித்துக்கொண்டே போகும்.

நீ எதையும் கடவுளிடமிருந்து வேண்டாதே, உன்னையே கடவுளுக்குக் கொடுத்துவிடு. கவலையற்றுப் போகும்.

ஆசை முடிவில் உன்னை நரகத்தில் கொண்டுவிடும்.

ஏ மனமே! செருக்குற்று அலையாதே, உன்னிலும் மிக்க நல்லவர்கள் பல்லாயிரம் பேர்கள் இருக்கிறார்கள்.

அறிவாளி பிறரை ஒருக்காலும் அவமதிக்கமாட்டான்.

முட்டாள் பொறாமைப்பட்டு துக்கத்தை அனுபவித்துக் கொண்டிருப்பான்.

உலக இன்பமெல்லாம் இறுதியில் துன்பமாகவே முடியும்.

உன்னுடைய அந்தராத்மாவிற்கு மேலான நண்பனை நீ எவ்வுலகிலும் காண முடியாது.

ஆசை நரகத்தின் வாயிலாகும்.

பிறரையே நினைத்துக்கொண்டிருப்பவன் பாவியாவான்.

நேசித்தவனுக்குக் கேட்டை நினைப்பவன் மிகக் கொடிய துரோகி ஆவான்.

# கடன்



ஸ்ரீ திருமுருக
கிருபானந்தவாரியார்

கடன் என்ற சொல் ஒரு சுருங்கிய சொல்தான் ஆனுல் அது மிகவும் கடினமானது. பொருட்செறிவு நிறைந்தது. சிந்தனைக்குரிய சொல். ஒருவனிடமிருந்து ஒரு பொருளைப் பெற்றிருப்பானுயின் அவனைக் கடன்காரன் என்று கூறுவர். திருப்பித் தரவேண்டியதற்குக் 'கடன்' என்று பேர். கடன் பட்டவன் நல்லவனுக இருப்பானுயின் தலையிலே கல் வைத்தது போன்ற ஒரு பெருஞ்சுமையாக இருக்கும். அதனை எப்போது இறக்கி வைக்கலாம் என்ற உணர்ச்சி இருக்கும்.

ஒரு நூறு இருநூறு பணம் பெற்றவனே கடன்காரன் என்று வேதனையுறுகின்ருன். நமது இந்த உடம்பு விலை மதிக்க முடியாத மாணிக்கமல்லவா? கை கால்களில் ஏதாவது கெடுதி நேருமாயின் அதனை வெட்டி யெடுக்கும் மருத்துவருக்கு ஐந்நூறு ஆயிரம் சம்பாவனை தருகின்ருர்கள். வெட்டி யெடுப்பதற்குப் பெருந்தொகை தருவார்களானுல் கரங்களையும் கால்களையும்உண்டாக்கிக் கொடுத்த இறைவனுக்கு நாம் என்ன தருவது! நம்மால் ஆண்டவனுக்கு என்ன செய்ய முடியும்? ஆண்டவனே வேண்டுதல் வேண்டாமை யிலாதவன். எல்லாம் அவனுடையவை. நமக்குச் சொந்தமானது எது? ,

இந்த உடம்பு அவன் தந்தது; கதிர் மதி கனல் புனல் கடல் காற்று நிலம் பலர் கனி முதலிய அனைத்தும் அவன் தந்தவை.

இனிமையான பொருள் தேன். அது மலரிலிருந்து கிடைக்கின்றது. மலரை இறைவன் தந்தான். இல்லையேல் நமக்குத் தேன் கிடைக்குமா? ஐந்து கண்டங்களிலும் உள்ள விஞ்ஞானிகள் எல்லோருங்கூடி முயன்ருலும் செயற்கையினுல் ஒரு துளி தேன் உண்டாக்க முடியாதல்லவா?

இப்படியே ஒவ்வொன்றையும் உற்று நோக்கினும் விளங்கும்.

இத்தனையுந் தந்த இறைவனுக்கு நாம் கடன்காரர்களல்லவா? எழுந்தவுடனே மனதால் நினைத்து வாக்கினால் துதி செய்து, உடம்பினால் வணங்குவது நமது கடமையல்லவா? அது நாம் செலுத்த வேண்டிய கடன். இந்தக் கருத்தை யமைத்தே நமது முன்னோர்கள் எழுந்தவுடனே இறைவனை வணங்குவதைக் "காலைக் கடன்" என்று கூறினார்கள்.

"சந்தியா வந்தனம்" என்பது வடசொல். சம்-நன்றாக; தியா-தியானித்து: வந்தனம்-வணங்குவது; நன்றாகத் தியானித்து வணங்குதல் சந்தியா வந்தனம் காலைக் கடன் என்ற சொல்லில் உள்ள பொருட் செறிவு இதில் இல்லை நன்றாகக் கவனியுங்கள். ஒருவருக்கு ஒருவர் பொருளை இனமாகத் தந்தால் புண்ணியம்; தரவில்லையானால் பாவமில்லையே? ஆனால் வாங்கிய கடனைத் தராமல் மறுப்பது பாவமாகும். அது போல் இறைவனை வணங்குவது என்றால் வணங்கினால் புண்ணியம்; வணங்காவிடில் பாவமில்லை என்று தான் பொருள். காலைக் கடன் என்ற சொல் உணர்த்துவது வணங்கா தொழியின் கடன் தராதவன் துன்புறுவது போல இறை வணக்கம் புரியாதவன் கடமையும் நன்றியும் மறந்த பாவத்தினால் மறுபிறப்பில் பெருந் துன்பமுறுவன். ஆதலால் ஒவ்வொரு மனிதனும் உண்மையாக மனிதனாக இருப்பானாயின் எழுந்தவுடன் இறைவனை முடிந்த அளவில் வணங்குதல் வேண்டும்.

அவன் தந்த தலையினால் அத் தலைவனை ஒரு நாளில் ஒரு முறையாவது வணங்குதல் வேண்டும். 'தலையே நீ வணங்காய்" என்றார் அப்பர். அவன் தந்த நாவினால் அவனை வாழ்த்தவேண்டும் அவன் தந்த கரங்களால் கடிமலர் தூவித் தொழுதல் வேண்டும். அவனை நினையாமலும் துதியாமலும் தொழாமலும் இருப்போமாயின் நம்மினும் நன்றி மறந்த பாதகர் இருக்க முடியுமோ? நமக்கு உய்வும் உண்டாகுமோ?

ஆகவே உடம்பையும் உணர்வையும் உரையையும் உரை நிகழ்த்தும் வாக்கையும் காண்கின்ற கண்களையும் கேட்கின்ற செவிகளையும் நமக்குத் தந்த தலைவனை எழுந்தவுடன் ஒரு கண நேரமாகிலும் சிந்தித்துவந்திருக்கவேண்டும் அது நமது கடன். அக் கடனைத் தராதார்க்கு உய்வு கிடையாது.

இனி இக் கடனைச் செலுத்தும் நல்லடியார்களைக் கைவிடாது காப்பது கருணைக் கடலாகிய இறைவனது கடனுமாகும்.

ஒருவன் ஒரு செடியை நடுவானாயின் அதற்குத் தண்ணீர் விடுவது அவனுடைய முதன்மையாகிய கடமையல்லவா? அதுபோல் இறைவன் படைத்த இவ்வுடம்பை அவன் காக்கக் கடமைப் பட்டவன் "கடவுளே! என்னைக் காத்தருள்" என்று நாம் ஏன் இறைவனைக் கேட்கவேண்டும்.

"கருணைக் கடலே! அடியேனைக் காக்கக் கடமைப்பட்ட நீ காவாமல் இருந்தால் வேறு யாருக் காவது அதில் அக்கறை உண்டாகுமா? என்னைக் காப்பாற்றுவது உனது தலைப்பாரம். தன் தலைச் சுமையைத் தானே இறக்குதல் வேண்டும். அதை இறக்காதிருந்தால் தனக்குத் தானே இடர்" என்ற பொருளில் ஒரு பழைய பாடல்.

ஆகவே நாம் ஒவ்வொருவரும் இறைவனைச் சிக்கென பிடித்துக் கொள்ள வேண்டும். "உள்ளேன் பிற தெய்வம் உன்னையல்லா தெங்கள் உத்தமனே" என்ற திரு வாக்கின்படி அவன் திருவடியை உறுதியாகப் பிடித்துக்கொள்ள வேண்டும். அதற்கு 'மர்க்கட நியாயம்' என்று பேர். குரங்குக் குட்டி தாயைப் பிடித்துக் கொள் வதுபோல் என அறிக.

பின்னர் இறைவன் தன்னைப் பிடித்துக் கொண்ட உத்தம ஆன்மாவைத் தளரவிடாது தாங்கிக் கொள்வான். அதற்கு 'மார்ஜால நியாயம்' என்று பேர். தாய்ப் பூனை தன் குட்டிகளைப் பிடித்துத் தூக்கிக் கொண்டு போகும்; அது போல்.

தன்னை நம்பிய நல்லடியாரை ஆள்வது இறைவனது கடன் என்பதை இதனால் உய்த்துணர்க.

"தன் கடன் அடியேனையுந் தாங்குதல், என் கடன் பணி செய்து கிடப்பதே."



# சத்சங்கத்தின் மஹிமை



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

விஸ்வாமித்திர மஹரிஷிக்கும் வசிஷ்டருக்கும் முன் ஒரு காலத்தில் அபிப்பிராய பேதம் ஏற்பட்டது. விஸ்வாமித்திரர் ஓர் பெரிய தபசி. அவர் தமது தபோ பலத்தினுல் மூன்ருவது உலகமொன்றை திரிசங்கு மஹாராஜாவுக்காகச் சிருஷ்டித்தார்.

விஸ்வாமித்திரர் வசிஷ்டரிடம் "உலகில் வேறு எல்லாவற்றைக் காட்டிலும் தவந்தான் பெரிது" என்ருர்.

வசிஷ்டர் இதற்கு மாருக "சத்சங்கம் தவத்தைக் காட்டிலும் எவ்வளவோ மேலானது" என்று கூறினர். பின், அவர்கள் பிரஹ்ம தேவரை அணுகி அவரது அபிப்பிராயத்தைத் தெரிந்துக்கொள்ளுவதென தீர்மானித்தார்கள். அங்ஙனம் அவர்கள் பிரஹ்ம தேவரிடம் போய்த் தமது விஷயங்களைச் சொல்லி அபிப்பிராயங் கேட்டார்கள்.

பிரஹ்ம தேவர் "சிருஷ்டிக்கும் காரியத்தில் நான் சுறுசுறுப்பாயிருக்கிறேன். எனக்கு நேரம் இல்லை. சிவபெருமானைப் போய்க் கேளுங்கள். அவருக்கு நிரம்பவும் ஓய்வு உண்டு. வேறு அலுவல் எதுவும் அவருக்கு இப்போது கிடையாது. பிரளயம் வரும் போது மாத்திரமே அவருடைய அலுவல் ஆரம்ப மாகும்" என்று செப்பினர்.

அப்படியே விஸ்வாமித்திரர் சிவபெருமானைப் பார்க்கச் சென்ருர். சிவபெருமான் "எனது சிறந்த பக்தர்களில் ஒருவரைப் பார்க்கச் செல்லுகிறேன். இப்போது நேரமில்லை. மஹாவிஷ்ணுவிடம செல்லுங்கள். அவர் தமது பக்தரிடம் பொறுமையாயிருந்து கேட்பார்" என்ருர்.

விஸ்வாமித்திரரும் வசிஷ்டரும் மஹாவிஷ்ணுவைப் போய்ப் பார்த்தார்கள். "இந்த விஷயத்தைப் பற்றி என்னுல் தீர்ப்புக் கூறமுடியாது. தயவு செய்து ஆதிசேஷரிடம் போங்கள். அவர் தமது ஆயிரம் நாவினுல் இராம நாம மந்திரத்தைச் சதாகாலமும் ஜெபித்துக் கொண்டிருக்கிருர். அவர் ஓர் பெரும் பக்தர்; பெரிய ஞானியுங்கூட. இதற்கு முடிவான

தீர்ப்புக் கூறுவதற்கு அவர்தான் தக்க நபர்'' என்று மகாவிஷ்ணு மொழிந்தார்.

பின்பு, அவர்கள் ஆதிசேஷரை அண்டினார்கள். ஆதிசேஷர், ''நிச்சயமாக, நான் இறுதியான தீர்மானத்தைச் சொல்லுவேன். எனது தலையிலிருக்கும் பூமி பாரத்தைத் தயவுசெய்து தீர்த்து வைக்கவும். அப்பால்தான், எனது கருத்தைத் தெரிவிக்கமுடியும்'' என்றார். அப்பால், அவ்விருவரும் ''ஓ! ஆதிசேஷரே! இப்பாரத்தைத் தீர்ப்பதற்கு உபாயஞ் சொல்லுங்கள்'' என்றார்கள்.

ஆதிசேஷர் ''உங்களுடைய தவம், சத்சங்கம் ஆகியவற்றின் பலத்தைத் தயவுசெய்து எனக்குக் கொடுங்கள். எனக்கு இப் பூபாரம் தீரும்'' என்று கூறினார்.

விஸ்வாமித்திரர் ''இவ்வளவு தானா? நான் செய்த நூறு வருஷத் தபத்தின் பலனைத் தானமளிக்கிறேன்'' என்றார். ஆதிசேஷருடைய தலைமேலுள்ள பாரம் நீங்கவில்லை. பின், விஸ்வாமித்திரர் ''இப்போது, நான் செய்த ஆயிரம் வருஷத் தவத்தின் பலனைத் தருகிறேன்'' என்றார். அப்போதுகூட ஆதிஷேருடைய சுமை நீங்கினபாடில்லை. பிறகு, விஸ்வாமித்திரர் ''என் வாணாள் முழுதும் செய்த தவத்தின் பலனைத் தருகிறேன்'' என்றார். அப்போது கூட ஆதிசேஷருடைய பூமிபாரம் தீர்ந்தபாடில்லை.

அப்பால் வசிஷ்டர், ''எனது வாழ்க்கையில் ஒரு செக்கண்டு நேரம் செய்த சத்சங்கத்தின் பலனைத் தருகிறேன்'' என்று கூறினார். உடனே, ஆதிசேஷருடைய தலைச் சுமை நீங்கியது.

அப்பால் விஸ்வாமித்திரர் அவமானத்தினால் தமது தலையைத் தாழ்த்தினார். அவர் ஆதிசேஷரிடமோ, வசிஷ்டரிடமோ ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. தபத்தைக் காட்டிலும் சத்சங்கம் மேலானது என்பதை அவர் முற்றிலும் உணர்ந்தார். தாம் ஓர் தபசி எனும் அகம்பாவம் அடியோடு வீழ்ந்து போயிற்று.

ஓர் முமுக்ஷுக்கு சம்ஸாரம் எனும் சாகரத்தைக் கடப்பதற்கு உதவியளிக்கும் ஓர் பாத்திரமான பெரிய படகு சத்சங்கம் ஆகும்.

சத்சங்கத்தின் மஹிமையை வார்த்தைகளால் சொல்ல இயலாது. சத்சங்கத்தை எல்லாச் சாஸ்திரங்களும் பெரிதும் பாராட்டுகின்றன. சத்சங்கத்தில் ஒருவன் ஈடுபட்டால், அவன் எல்லாவற்றையும் அடைகிறான். சத்சங்கம் ஒருவனுடைய சம்ஸ்காரங்களை அகற்றி அவனுடைய ஹிருதயத்தில் விரக்தி ஊட்டுவதற்கு ஒரே சக்திவாய்ந்த சாதனமாகிறது. மாயையினால் தாக்குண்டு மயங்குவதினின்று முமுக்ஷுக்களைக் காப்பாற்றுவதற்கு சத்சங்கமானது ஓர் மஹத்தான கோட்டையாகிறது. சத்சங்கமின்றி ஆத்மீய முன்னேற்றம் அணுவளவும் சாத்தியமில்லை.

சத்சங்கம், ஸாந்தி, சந்தோஷம், விசாரம் ஆகியோர் நால்வரும் மோக்ஷவாயிற் காவற்காரர்கள். இவர்களுள் சத்சங்கம் என்பவர் எல்லாவற்றிலும் முதல்வர். அவருடைன் நேசம் பாராட்டினால், மற்ற மூவரும் உனக்கு நண்பர்களாவார்கள். மோக்ஷமெனும் மேலான பதத்திற்குள் பிரவேசிக்க எளிதாகும். அதனால் நித்தியானந்தம் பெறுவாய்.



# ஸ்ரீ நாராயண தீர்த்தர்

## எம்பார் விஜயராகவாச்சாரியார்

'ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணி' என்ற சங்கீத காவ்யத்தை இயற்றியவர் ஸ்ரீ நாராயண தீர்த்தர். ஸ்ரீ கிருஷ்ண ஜனனம் முதல் ருக்மணீ கல்யாணம் முடிய இந்த இசைக் காவியத்தில் பாடப்பட்டு இருக்கிறது. இவருடைய தரங்கங்கள் கர்னுடக சங்கீதத்திற்கு பொக்கிஷமானவை.

ஸ்ரீத்யாகராஜ ஸ்வாமி ஸ்ரீ நாராயணதீர்த்தருக்கு வந்தனம் செலுத்தி ப்ரஹ்லாத பக்தி விஜயம் என்ற இசை நாடகத்தை ஆரம்பிக்கிருர்.

"ஸ்ரீ நாராயண தீர்த்தாதி பகவத் தாஸுலெல்லாம், ப்ரணமில்லி" என்று.

17வது நூற்ருண்டு பிற்பகுதியில் பிறந்து 18வது நூற்ருண்டின் முன் பகுதியில் வாழ்ந்தவர் நாராயண தீர்த்தர்.

ஆந்திர தேசத்தில் குண்டூர் ஜில்லாவில் 'மங்களகிரி' என்ற நரஸிம்ம க்ஷேத்திரத்துக்கு சமீபமான "கானூர்" என்ற கிராமத்தில் பிறந்தவர் இவர். பால்யத்திலேயே ஸ்வப்பனத்தில் "த்வாத சாக்ஷரீ" உபதேசம் பெற்றவர்.

பல சாஸ்திரங்களையும் கற்றுத் தேறியவர். வேதாந்த சாஸ்திரத்தில் விசேஷ பாண்டித்யம் பெற்றவர். பல வித்வான்களோடு வாக்யார்த்தம் செய்து வெற்றி பெறுவதில் ஆசை மிகுந்தவர். தவம் இயற்றப் போனுர். தவம் பலிக்கவில்லை. வீடு திரும்பினுர். தாய் தந்தையரின் நிர்பந்தத்தால், கோதாவரிக்கு அக்கரையிலுள்ள 'குச்சி மஞ்சி' என்ற கிராமத்தில் ஒரு பெண்ணை மணந்து கொண்டார். இல்லறத்தில் பற்றில்லாமலே வாழ்ந்தார்.

ஒரு சமயம் இவர் கோதாவரி நதியை கடக்க முயன்றபோது ப்ரவாஹத்தில் அகப்பட்டுக் கொண்டு ப்ராண பயம் வந்து விட்டது. அந்த வேளையில் இவர் மனத்தால் ஆபத் ஸந்யாசம் செய்து கொண்டார். பிறகு நினைவு இழந்தார். அப்பொழுது பக்கத்தில் இருந்த சிலர் இவரைக் காப்பாற்றி இவருடைய வீடு கொண்டுபோய் சேர்த்தார்கள். வெகுநேரம் சென்று இவர் நினைவு பெற்று எழுந்திருந்தார். அப்பொழுது இவருடைய மனைவி இவரைப் பார்த்தபோது காஷாய தண்டங்களோடு சந்யாசியாகத் தோற்றமளித்தார்.

அவளும் தன் கணவரை நோக்கி "ஸ்வாமி தங்களைப் பார்த்தால் சந்யாசி போலிருக்கிறதே" என்று கேட்டாள். அப்பொழுதுதான் இவருக்கு ஆபத் சந்யாஸம் செய்துகொண்டது நினைக்கு வந்தது.

உடனே வீட்டைவிட்டு வெளியேறி காசிக்குப் போய்ச்சேர்ந்தார். காசிக்குப் போயும் அங்கிருந்த பல சந்யாஸிகளுடனும், வித்வான்களோடும் சாஸ்த்திர விஷயமான சர்ச்சைகளைச் செய்து வரலானுர்.

அப்பொழுது அங்கே இருந்த "ராமானந்தர்" என்ற யதி இவரை நோக்கி 'சாஸ்த்திர விசாரங்கள்' போதும், ஆதி சங்கரர் இயற்றிய 'ப்ரபோத ஸுதாகரம்' என்ற நூலை ஆராய்ந்து பாரும்' என்றாராம்.

நாராயண தீர்த்தரும் அவர் சொன்னபடியே ப்ரபோத ஸுதாகரத்தை ஆராய்ந்து, அதிலுள்ள ப்ரம்ஹ மோகன லீலையில் மனதைப் பறிகொடுத்து கிருஷ்ண பக்தியில் ஆழ்ந்தார்.

பிறகு அந்த யதிகளிடமே முறைப்படி ஸந்யாஸாச்ரமத்தை ஏற்றுக்கொண்டு ஸ்ரீ ஜய தேவ ஸ்வாமி பாடிய கீத கோவிந்த காவ்யத்தை அத்யயனம் செய்து கொண்டு க்ஷேத்ராடனங்கள் செய்யத் தொடங்கினார்.

தமிழகத்தில் கோவிந்தபுரத்தில் வாழ்ந்த போதேந்திரரை தரிசனம் செய்ய ஆசைப்பட்டு தென்னாட்டு யாத்திரையைத் தொடங்கினார். வரும் வழியில் திருப்பதி மலைக்குவந்து ஸ்ரீநிவாசனை தரிசனம் செய்தார். திருமலையில் சிலநாள் தங்கி இருந்தார்.

வேங்கடமலையில் இவர் இருந்த போது ஸ்ரீவெங்கடேசன் ஒரு ஆயர் சிறுவன்போல் இவர் சமீபம் வந்து கை நிறைய பக்ஷணங்களை வைத்துக் கொண்டு நின்று கொண்டிருந்தார். இதைக் கண்ட நாராயண தீர்த்தரும், 'குழந்தாய், கண்டதை எல்லாம் தின்னாதே! வயிற்றை வலிக்கும்' என்றார்.

அந்த சிறுவனும் உனக்குத் தான் வயிற்றுவலி வரும் என்று சொல்லி ஆட ஆடம்பித்துவிட்டான். அவனாட்டத்திற்கு இவரும் பாட ஆரம்பித்தார். 'பால கோபால மாம் உத்தர' என்ற ஜதிஸ்வரம் அது. இதுவே இவர் பாடிய முதற் பாட்டாகும். இந்தப் பாடல் கிருஷ்ணலீலா தரங்கிணியில் 3-வது தரங்கத்தில் யக்ஞ பத்னிகள் சொல்வதாக சேர்த்து அமைக்கப்பட்டிருக்கிறது.

பிறகு திருப்பதியிலிருந்து தெற்கே யாத்திரை செய்து வருகிறார். இவருக்கு வயிற்று வலியும் வந்து விடுகிறது. அதையும் பொறுத்துக் கொண்டு போதேந்திரரைப் பார்க்க கோவிந்தபுரம் வருகிறார். இவர் வந்து சேர்வதற்குள் போதேந்திரர் ஸித்தியாகி விடுகிறார்.

மறுபடியும் திருப்பதி சென்று ஸ்ரீநிவாசனை ஸேவிக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு, நடுக்காவேரியில் ஒரு பிள்ளையார் கோவிலில் படுத்து உறங்கினார். இவர் கனவில் வெங்கடேசன் தோன்றி 'நாராயண தீர்த்தரே! காலை துயில் எழும்போது யார் முகத்தில் விழிக்கிறாயோ அவரோடு பின் தொடர்ந்து போனால் நம் தரிசனம் கிடைக்கும்' என்று சொல்லி மறைந்தார்.

அதன்படியே இவரும் பொழுது விடியும்போது கண் விழித்தார். பிள்ளையார் கோவிலிலிருந்து ஒரு பன்றி ஓட ஆரம்பித்தது. (அன்று முதல் அந்தப் பிள்ளையாருக்கு வராஹ பிள்ளையார் என்று பெயர்).

அந்த வராஹத்தையே பின் தொடர்ந்து இவரும் ஓட, பன்றி பூபதிராஜபுரம் அக்ரஹாரத்தில் ஒரு வீட்டிற்குள் நுழைந்து மறைந்தது. ஸ்ரீ நாராயண தீர்த்தரும் அந்த இடத்தில் பூமியை சோதித்துப் பார்த்தபோது, ஸ்ரீ

வெங்கடேசனுடைய திவ்ய மங்கள விக்ரஹம் இருக்கக்கண்டார்.

அந்த ஸ்ரீநிவாசனை அவ்விடத்திலேயே ப்ரதிஷ்டை செய்து வழிபட்டார். இவர்தான் வராஹபுரி வெங்கடேன். வராஹபுரி என்பதுதான் வரஹூர் என்று வழங்கப்படுகிறது. இந்த வெங்கடேசனுக்கு இவர் பாமாலையாக சூட்டியது 'கிருஷ்ண லீலா தரங்கிணி' என்ற இசைக் காவியம். இவர் சித்தியானது, கங்கையிற் புனிதமான காவிரி தீரத்திலுள்ள 'திருப்பூந்துருத்தி' என்ற இடமாகும்.

இன்றும், திருப்பூந்துருத்தியில் காவேரி தீரத்தில் ஸ்ரீ நாராயண தீர்த்தருடைய அதிஷ்டானம் பெருமையுடன் விளங்குகிறது. ஸ்ரீ நாராயண தீர்த்தருடைய திருவடிகளை ஸ்மரித்து ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணியில் உள்ள பாடல்களைப் பாடி ஸகல ஸௌபாக்யங்களையும் பெறுவோமாக.



# கண்ணைப் பற்றியதொரு கண்ணோட்டம்

திரு. ஆர். ரெங்கராஜன் மதுரை

''கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை''

உலகிலேயே மிக உயர்ந்த நிலையான செல்வம் கல்வி ஒன்றுதான். மற்றைய செல்வங்கள் நிலையற்றவையாகும். கல்வியறிவுள்ள சான்றோர்கள் சென்றவிடமெல்லாம் சிறப்பிக்கப்படுவார்கள். கல்வியின் பெருமையை உணர்த்துவதற்காக திருவள்ளுவர் திருக்குறளில் ஒரு அதிகாரமே ஒதுக்கியுள்ளார். கலைமகளின் அருளால் கிடைத்த கல்விச் செல்வத்தைச் சான்றோர் கண்ணுக்கு உவமையாக ஒப்பிட்டுள்ளார்கள். இதனால் கண்ணுக்குள்ள சிறப்பு வெள்ளிடைமலையென விளங்கும். வாழ வகை செய்வது கல்வி. அக்கல்வியைப் பெற துணைசெய்வது கண்கள். ஐம்புலன்களில் அதற்கு சிறப்பானதொரு இடம் உண்டு. நமது ஆன்றோர் கூறுவதைக் கேட்போம்.

''எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்'' என்பது ஔவையின் ஆத்திச்சூடி.

''எண்ணென்ப ஏனைஎழுத்தென்ப
இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு''

என்பது பொய்யாமொழிப் புலவரின் திருக்குறள்.

நான்மணிக்கடிகையை நமக்கு நல்கிய விளம்பிநாகனார் கூறுகிறார் :

''கண்ணிற்சிறந்த உறுப்பில்லை
கொண்டானின்
துண்ணியகேளிர் பிறரில்லை மக்
களின்
ஒண்மையவாய்ச்சான்ற
பொருளில்லை ஈன்றாளோ (டு)
எண்ணக்கடவுளும் இல்''

இதன் பொருள் உடல் அவயங்களில் எல்லாம் கண்ணே மிகவும் சிறந்தது. கற்புடைய பெண்ணுக்குக் கணவனே சிறந்த தெய்வம். பெற்றோருக்கு மக்கட் செல்வமே சிறந்த செல்வம். தாயைக்காட்டிலும் மேலான தெய்வம் தரணியில் இல்லை என்பதேயாகும்.

ஒன்றின் சிறப்பை விளக்க அதற்கு ஈடான மற்றொன்றின் சிறப்பை எடுத்துக்காட்டாகக் கூறுவதை தமிழ் இலக்கணத்தில் ''வேற்றுப்பொருள் வைப்பணி'' என்பார்கள்.

இதனால்தான் கண்ணின் சிறப்பைக் கூறவந்த கட்டுரையின் ஆரம்பத்தில் கல்வியின் உயர்வு பற்றி கூறப்பட்டுள்ளது. இத்தகைய சிறப்பு பொருந்திய கண்களை பாதுகாப்பது நமது கடமையாகும்.

நமது உடல் அவயங்களிலேயே 'கண்' ஒன்றுதான் மெல்லிய ஆனால் சக்திவாய்ந்த உறுப்பாகும் இச்சக்தி நீடித்து விளங்ககண்களை பாதுகாப்பது அவசியமாகிறது. கண் நோய்களுக்கு உடலில்வரும்

மற்ற நோய்களும் காரணமாக உள்ளன என்று கண் வைத்தியர்கள் கூறுகின்றனர்.

ஆதலால் நமது உடல் நோய் அணுகாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். பல்லாயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பாலிருக்கும் நிலவையும் நட்சத்திரங்களையும் காணும் சக்திபடைத்த நமது கண்கள் பல மில்லிமீட்டர் தூரத்திலிருக்கும் பொருளைக்கூடக் காணும் சக்தியை இழப்பது எவ்வளவு வேதனைக்குரிய விஷயம்.

பாலில் சிறிது மோரைக் கலந்தால் தயிராகிவிடுகிறது. ஆனல் தயிரைப் பாலாக்குவது முடிகிற காரியமா? அதுபோல்தான் இழந்த பார்வையை மீண்டும் பெற நினைப்பதும். இதனுல்தான் கண் வியாதிகளுக்கு காலமுணர்ந்து சிகிச்சை செய்யவேண்டும் என்கிருர்கள் காலங்கடந்து செய்யப்படும் எந்த செயலும் பயனைத்தராது.

மற்றவர்களுக்கு வெட்கப்பட்டுக்கொண்டு கண்சிகிச்சை செய்து கொள்ளாமலிருக்கும் பழக்கம் இன்னும் இருந்து வருகிறது. நமது பார்வையை நாம் இழந்துவிட்டால் அவர்கள் உதவிக்கு வரமாட்டார்கள். நமது வாழ்க்கைதான் வீணுகிறது. ஆகையால் கண்ணில் கோளாறு இருக்கிறதென்று தெரிந்தவுடனே தக்கதொரு கண் வைத்தியரிடம் சிகிச்சை பெற்றுக்கொள்ளவேண்டும், நாமாக எந்த வைத்தியத்தையும் செய்துகொள்ளக்கூடாது பால், மோர், முட்டை, மீன், கைக்குத்தலரிசி, காரட் இவற்றில் கண்ணுக்குத் தேவையான A வைட்டமின்கள் நிறைந்துள்ளன. இவற்றை உணவில் அடிக்கடி சேர்த்துக் கொள்ளவேண்டும்.

கண்ணில் தூசிவிழுந்தால் சுத்தமான துணியினுல் தூசியை எடுக்க வேண்டும். வாரத்திற்கு ஒரு முறை 'ஆர்ஜிரால்' 15% மருந்தைக் கொண்டு கண்களைக்குளிப்பாட்ட வேண்டும். மூக்குக் கண்ணுடியை அணிந்துள்ளவர்கள் 'யூடிகொலான்' என்ற மருந்தால் கண்ணுடியைச் சுத்தப்படுத்தலாம்.

ஒரு நாட்டின் எதிர்காலம் குழந்தைகளின் கையில்தான் அடங்கியிருக்கிறது. குழந்தை பிறந்த 5 ஆண்டுகள் வரை அவர்களுடைய கண்களின் சக்தியை சத்துள்ள உணவுகளால் பாதுகாக்கவேண்டும். அந்தப் பருவத்தில் சத்துள்ள உணவும் ஆரோக்கிய போஷாக்கும் கொடுக்காவிடில் பின்னர் எத்தனைபாடுபட்டாலும் இழந்ததை மீண்டும் பெற முடியாது.

பெற்றேர்களின் வருமை வருங்கால மக்களின் வளர்ச்சியைத் தடை செய்வதாக இருக்கக்கூடாது. ஆளாகி பெற்றேர்களைக் காக்கும் பருவத்தில் (இளம் பருவத்தில் சத்துள்ள உணவு உட்கொள்ளாததால்) கண் பார்வையை இழந்துவிடுவதுஎவ்வளவு துயரமானது? ஆரம்பத்தில் அக்கறை எடுத்துக்கொண்டால்இந்த துயரத்தை நாம் களைய முடியும்.

சத்துள்ள உணவு கிடைக்காததால் பள்ளிக்குச் செல்லும் வயது வருவதற்கு முன்னரே குழந்தைகள் கண்ணுடி போட்டுக்கொண்டு விடும் பரிதாப நிலையை நாம் நேரில் பார்க்கிறோம்.

இந்த நிலைமேலும் நீடிக்காமலிருக்க வேண்டுமானுல், நாட்டுக்கு நல்ல உழைப்பாளிகள் தேவையானுல் அரசாங்கமும், வசதி படைத்த தனியார் நிறுவனங்களும் குழந்தைகளின் பராமரிப்பில் தங்களால் இயன்றதைச் செய்ய முன்வரவேண்டும்.

—நன்றி டி. வி. எஸ். செய்தி

மற்ற நோய்களும் காரணமாக உள்ளன என்று கண் வைத்தியர்கள் கூறுகின்றனர்.

ஆதலால் நமது உடல் நோய் அணுகாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். பல்லாயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பாலிருக்கும் நிலவையும் நட்சத்திரங்களையும் காணும் சக்திபடைத்த நமது கண்கள் பல மில்லிமீட்டர் தூரத்திலிருக்கும் பொருளைக்கூடக் காணும் சக்தியை இழப்பது எவ்வளவு வேதனைக்குரிய விஷயம்.

பாலில் சிறிது மோரைக் கலந்தால் தயிராகிவிடுகிறது. ஆனால் தயிரைப் பாலாக்குவது முடிகிற காரியமா? அதுபோல்தான் இழந்த பார்வையை மீண்டும் பெற நினைப்பதும். இதனால்தான் கண் வியாதிகளுக்கு காலமுணர்ந்து சிகிச்சை செய்யவேண்டும் என்கிறார்கள் காலங்கடந்து செய்யப்படும் எந்த செயலும் பயனைத்தராது.

மற்றவர்களுக்கு வெட்கப்பட்டுக்கொண்டு கண்சிகிச்சை செய்துகொள்ளாமலிருக்கும் பழக்கம் இன்னும் இருந்து வருகிறது. நமது பார்வையை நாம் இழந்துவிட்டால் அவர்கள் உதவிக்கு வரமாட்டார்கள். நமது வாழ்க்கைதான் வீணாகிறது. ஆகையால் கண்ணில் கோளாறு இருக்கிறதென்று தெரிந்தவுடனே தக்கதொரு கண் வைத்தியரிடம் சிகிச்சை பெற்றுக்கொள்ளவேண்டும், நாமாக எந்த வைத்தியத்தையும் செய்துகொள்ளக்கூடாது பால், மோர், முட்டை, மீன், கைக்குத்தலரிசி, காரட் இவற்றில் கண்ணுக்குத் தேவையான A வைட்டமின்கள் நிறைந்துள்ளன. இவற்றை உணவில் அடிக்கடி சேர்த்துக்கொள்ளவேண்டும்.

கண்ணில் தூசிவிழுந்தால் சுத்தமான துணியினால் தூசியை எடுக்க வேண்டும்.வாரத்திற்கு ஒரு முறை 'ஆர்ஜிரால்' 15% மருந்தைக் கொண்டு கண்களைக்குளிப்பாட்ட வேண்டும். மூக்குக் கண்ணாடியை அணிந்துள்ளவர்கள் 'யூடிகொலான்' என்ற மருந்தால் கண்ணாடியைச் சுத்தப்படுத்தலாம்.

ஒரு நாட்டின் எதிர்காலம் குழந்தைகளின் கையில்தான் அடங்கியிருக்கிறது. குழந்தை பிறந்த 5 ஆண்டுகள் வரை அவர்களுடைய கண்களின் சக்தியை சத்துள்ள உணவுகளால் பாதுகாக்கவேண்டும். அந்தப் பருவத்தில் சத்துள்ள உணவும் ஆரோக்கிய போஷாக்கும் கொடுக்காவிடில் பின்னர் எத்தனைபாடுபட்டாலும் இழந்ததை மீண்டும் பெற முடியாது.

பெற்றோர்களின் வறுமை வருங்கால மக்களின் வளர்ச்சியைத் தடை செய்வதாக இருக்கக் கூடாது. ஆனாகி பெற்றோர்களைக் காக்கும் பருவத்தில் (இளம் பருவத்தில் சத்துள்ள உணவு உட்கொள்ளாததால்) கண் பார்வையை இழந்துவிடுவதுஎவ்வளவு துயரமானது? ஆரம்பத்தில் அக்கறை எடுத்துக்கொண்டால்இந்த துயரத்தை நாம் களைய முடியும்.

சத்துள்ள உணவு கிடைக்காததால் பள்ளிக்குச் செல்லும் வயது வருவதற்கு முன்னரே குழந்தைகள் கண்ணாடி போட்டுக்கொண்டு விடும் பரிதாப நிலையை நாம் நேரில் பார்க்கிறோம்.

இந்த நிலைமேலும் நீடிக்காமலிருக்க வேண்டுமானால், நாட்டுக்கு நல்ல உழைப்பாளிகள் தேவையானால் அரசாங்கமும், வசதி படைத்த தனியார் நிறுவனங்களும் குழந்தைகளின் பராமரிப்பில் தங்களால் இயன்றதைச் செய்ய முன்வரவேண்டும்.

—நன்றி டி. வி. எஸ். செய்தி

# விநோபா குட்டிக் கதைகள்

ஆச்சார்ய விநோபா

### மரண மிலாப் பெருவாழ்வு

சாக்ரடீசுக்கு விஷம் கொடுத்துக் கொல்ல வேண்டுமென்று தண்டனை விதிக்கப்பட்டது. ஆனால் அவரோ, "நான் இப்பொழுது கிழவனாகி விட்டேன். இன்னும் கொஞ்ச காலத்தில் இவ்வுடல் பிரியத்தான் போகிறது. இறக்கப் போகின்றவனைக் கொன்று நீங்கள் என்ன பெரிய வீரத்தை நிலைநாட்டப்போகிறீர்கள்? கொஞ்சம் சிந்தியுங்கள்! இந்த உடல் ஒரு நாள் அவசியம் மடியப் போகிறது எது அழியக் கூடியதோ அதை அழிப்பதால் என்ன பெருமை?" என்று சொல்ல ஆரம்பித்தார்.

சாக்ரடீசுக்கு விஷம் கொடுக்க நிச்சயிக்கப்பட்ட நாளுக்கு முதல் நாள் இரவு அவர் தனது சீடர்களுக்கு ஆத்மா அழியாதது என்பதை உபதேசித்துக் கொண்டிருந்தார். உடலில் விஷம் புகுந்ததும் என்ன — என்ன வேதனைகள் ஏற்படும் என்பதை உற்சாகமாக வர்ணனை செய்தார். அவரிடம் கவலை சிறிது கூட இல்லை. "ஆத்மா அழியாது" என்ற விவாதம் முடிந்தது.

"நீங்கள் இறந்த பின்னர் உங்கள் ஈமச் சடங்குகளை எவ்வாறு செய்ய வேண்டும்" என அவருடைய சீடன் ஒருவன் கேட்டான்.

"மிகவும் நன்றாக இருக்கிறது! அவர்கள் கொல்லுவார்கள்: நீ புதைப்பாய். கொல்பவர்கள் எனது எதிரிகள் என்றால் புதைப்பவர்கள் மட்டும் என்மீது அதிக அன்பு காட்டுபவர்களா? அவர்கள் புத்திசாலித்தனமாக என்னைக் கொல்லுவார்கள், நீ புரிந்தவன் என்னைப் புதைப்பாய். நான் உங்கள் எல்லோரையும் மிஞ்சியவன். நீங்கள் என்னை மண்ணில் தானே புதைப்பீர்கள்? யாரும் என்னைக் கொல்ல முடியாது; புதைக்கவும் முடியாது. இதுவரை நான் உங்களுக்கு என்ன உபதேசம் செய்தேன்? ஆத்மா அழியாதது இதை யார் கொல்லவோ, புதைக்கவோ முடியும்?"

உண்மைதான். இன்றும் 2000-2500 ஆண்டுகளாக எல்லோரையும் புதைத்துவிட்டு அந்த மகான் சாக்ரடீஸ் மரணமிலாப் பெருவாழ்வு வாழ்கிறார்.

* * *

ஸ்ரீமான் அபசகுனம்!

ஒரு மனிதன் இருந்தான். அவனுக்கு தனது வீடு அமங்கலமானதாகத் தோன்றியது. அவன் கிராமத்திற்குப் போனான். அங்கும் அவனுக்கு எங்கும் அசுத்தமே தென்பட்டது. உடனே அதை விட்டு காட்டிற்குப் போனான். காட்டில் ஒரு மாமரத்தின் அடியில் போய் உட்கார்ந்தான். ஒரு பறவை மரத்திலிருந்து அவனுடைய தலையில் எச்சமிட்டு விட்டது.

"இந்தக் காடும் அமங்கலம்" என்று சொல்லிக் கொண்டே அவன் ஓர் ஆற்றை அடைந்தான். ஆற்றில் பெரிய மீன்கள் சிறிய மீன்களை விழுங்குவதைப் பார்த்தான். இந்தக் காட்சி அவனுக்கு அருவருப்பாக இருந்தது. இந்தப் படைப்பே அமங்கலமானது. செத்தாலொழிய இதிலிருந்து விடுதலை பெறமுடியாது என நினைத்து தண்ணீரை விட்டு வெளியே வந்தான். நெருப்பு மூட்டினான்.

அவ்வழியே வந்த பெரியவர் ஒருவர் "ஏனப்பா, சாவதற்கான இந்த ஏற்பாடுகள்?" என்று கேட்டார்.

"இவ்வுலகமே அமங்கலமாக இருக்கிறது, அதனால் தான்" என்று சொன்னான்.

"உன்னுடைய இந்த அசுத்த உடலும், கொழுப்பு முதலியனவும் எரியத் தொடங்கினால் எவ்வளவு நாற்றம் கிளம்பும்? பக்கத்தில் வசிக்கும் நாங்கள் எல்லோரும் எங்கே போவோம்? ஒரு மயிர் பொசுங்கினாலே எவ்வளவு நாற்றமடிக்கிறது? உன்னுடைய கொழுப்பு முழுவதும் எரிவதானால்......" என்று அந்தப் பெரியவர் கேட்டார்.

இதைக் கேட்டதும் அம்மனிதனுக்கு சலிப்பு ஏற்பட்டு விட்டது. இந்த உலகில் வாழவும் வசதியில்லை, சாகவும் இடமில்லை என்று அவன் அலுத்துக் கொண்டான்.

* * *

சிலையும் சிந்தனையும்

மாவீரன் அலெக்சாந்தரைப் பார்க்க ஒரு விருந்தினர் வந்தார். அவரை அவன் நன்கு உபசரித்தான். தனது மாளிகையிலேயே தங்க வைத்தான். பிறகு அவரைத் தனது அரண்மனைத் தோட்டத்திற்கு அழைத்துப் போனான்.

இருவரும் தோட்டத்தைச் சுற்றி வந்தார்கள், தோட்டத்தில் அநேகப் பெரிய வீரர்களின் உருவச் சிலைகள் வைக்கப்பட்டிருந்தன. விருந்தினர் ஒவ்வொரு சிலையிடமும் நிற்பார். அலெக்சாந்தர் அவருக்கு அதன் வரலாற்றைச் சொல்லுவான். இவ்வாறு ஒவ்வொரு சிலையாகப் பார்த்துக் கொண்டே தோட்டத்தின் கடைசிக்கு வந்து விட்டார்கள்.

வந்த விருந்தினர் அலெக்சாந்தரைப் பார்த்தார். "இத்தனை வீரர்களின் நிலைகள் இந்தத் தோட்டத்தில் இருக்கும் போது உங்களுடைய சிலை மட்டும் இங்கு ஏன் இல்லை?" என்று கேட்டார்.

"இங்கு எனது சிலையைப் பார்த்து, இது யாருடைய சிலை என்று வருபவர்கள் கேட்பதை விட, மாவீரன் அலெக்சாந்தருடைய சிலை ஏன் இங்கு இல்லை என்று கேட்பதையே நான் விரும்புகிறேன்" என்று பதில் சொன்னான் கிரேக்க மன்னன்.

(தஞ்சாவூர் சர்வோதய பிரசுராலயம் வெளியிட்ட வினோபா குட்டிக் கதைகள் என்ற புத்தகத்திலிருந்து)



---

# வழிபாட்டு யானைகள்

## திருவையாறு ஸ்வர்ணகாளீச்வரன்

யானைகள் கூட்டமாக வழிபாடாற்றத் தொடங்கின. ஆண் யானைகளும் பெண்யானைகளும் கலந்த கூட்டம். ஆண்யானை முன்னே செல்லப் பெண்யானைகள் யாவும் பின்னே சென்றன.

முன்னே சென்ற யானையின் துதிக்கையில் பூங்கொத்துக்கள். வழி பாட்டுக்குச் செல்லும் பொழுது வெறுங்கையோடு செல்லலாகாது அல்லவா?

அதிகாலையிலே எழுந்துவிட்டன அந்த யானைகள். அப்படி எழுந்த யானைகள் மிருகங்கள் தாமே? அப்படியே வந்துவிட்டனவா? இல்லை. இல்லை, குளத்தில் மூழ்கி வந்தன.

நீராடிய யானைகள் உடனே வழிபாட்டுக்கு நேரே வந்துவிட்டன. வந்ததும், ஏனோதானோ என்று, ஏதோ சுற்றி வந்தோம் என்று வந்தனவா? இல்லை இல்லை விதிப்படி வழிபட்டன. மேற்கூறிய யானை வழிபாட்டைக் காளையார் கோவில் என்னும் திருத்தலத்தில் ஞான சம்பந்தப் பெருமான் நமக்குக் காட்டுகின்றார்—

பிடியெலாம் பின்செலப்
பெருங்கைமா மலர்தழீஇ
விடியலே தடமூழ்கி
விதியினால் வழிபடும்
கடியுலாம் பூம்பொழில்
கானப்பே ரண்ணல்நின்
அடியலால் அடைசரண்
உடையரோ அடியரே

பின் வந்த பெண்யானைகளின் செயல்களையும் நமக்குக் காட்டுகிறார். ஆலயத்துக்குச் சென்ற பெண்யானைகள் அங்கே கிடந்த குப்பைகளைக் கண்டன. அது பற்றி உடனே குறைபேச ஆரம்பிக்கவில்லை. உடனே கூட்டத் தொடங்கிவிட்டன. வெட்கம் தெரிந்த, அழகு பொருந்திய இள யானைகள். தம் வளமையான துதிக்கைகளால் அலகிடும் பணிகளை அவை செய்கின்றன. ஆண் யானைகள், பின்வரும் யானைகளின் அழகை நோக்காமல் இறைவனையே வழிபடுகின்றன. "இத்தகைய காளையார் கோவிலில் வீற்றிருக்கும் பெருமானை, அன்பர்களே, ஞான மாமலர் கொண்டு வழிபடுங்கள்" என்று ஞானசம்பந்தப் பெருமான் நம்மையெல்லாம் அழைக்கிறார்.

இத்தகைய திருத்தலமாகிய காளையார் கோவில், ராமநாதபுரம் ஜில்லாவில் சிவகங்கையிலிருந்து பதினொரு மைல் கிழக்கே இருக்கிறது. சென்று வழிபட்டுப் பெருமானின் திருவருளைப் பெற்று மகிழுங்கள். ●

## சிவானந்தா ஆராதனை விழா

இராசிபுரம். ஆகஸ்டு 29. இராசிபுரம் சிவானந்தா ஆசிரமம் சிவானந்தா பிரார்த்தனை மண்டபத்தில் ஸ்ரீ குருபூர்ணிமாவும், சற்குருதேவ் ஸ்ரீ சுவாமி சிவானந்த மஹராஜ் மகா சமாதி 9 ஆவது ஆராதனை விழாவும் 26—7—72 முதல் 3—8—72 முடிய ஒன்பது நாட்கள் கொண்டாடப்பட்டது.

இவ்விழாவில் கோவை N. கிரிதாரி பிரசாத், வேலூர் தமிழ்ப் பேராசிரியர் திரு. A வைத்தியலிங்கம், M.A. பொத்தனூர் திரு. வெ. இராமசாமி ஐயர் ஆகியோர் உபன்யாசம் நிகழ்த்தினார்கள். கடைசி நாள் ஆராதனை தினத்தன்று காலை நகர் கீர்த்தனையும் பஜனை, அன்னதானமும் மாலையில் சேலம் நடராஜன் நாமாவளி பாடல் பாடியபின் ஆராதனை ஞாபகார்த்தமாக குருதேவ் ஸ்ரீ சுவாமி சிவானந்தா அந்திம காலத்தில் தனது பக்தர்களுடன் உரையாடிய தொகுப்பு "நான் மக்களுக்கு சேவை செய்யவே உயிர் வாழ்கிறேன்" என்ற நூல் வெளியிடப்பட்டது,

இந்நூல் வேண்டுவோர் காரியதரிசி, தெய்வீக வாழ்க்கைச் சங்கம், இராசிபுரம் (P. O.) சேலம் ஜில்லா என்ற விலாசத்திற்கு பதினைந்து பைசா தபால் தலை அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்

---

## வீடு வாசல் முதலிய செல்வங்கள் உண்டாக

உங்களுக்கு எனச் சொந்தமாக வீடுவாசல் முதலிய செல்வங்கள் உண்டாக வேண்டுமா? அதற்கு தினசரி ஒருமுறை அல்லது இருமுறை ஸ்ரீ அபிராமிபட்டர் அருளிச் செய்த அபிராமி அந்தாதியில் 20 - வது பாசுரம் பாராயணம் செய்யுங்கள். அந்தப் பாசுரம்

உறைகின்ற நின்திருக் கோயில்
நின் கேள்வர் ஒருபக்கமோ
அறைகின்ற நான் மறையின்
அடியோ முடியோ அமுதம்
நிறைகின்ற வெண்திங்களோ
கஞ்சமோ என்றன் நெஞ்சகமோ
மறைகின்ற வாரிதியோ
பூரணாசல மங்கலையே

# உபதேச மொழிகள்

எனது இலக்ஷியத்தை ஒரு சில சொற்களில் வெளிப்படுத்திவிடக் கூடும். மனிதர்கட்கு அவர்களது தெய்வத் தன்மையைப் போதித்தலும், அதனை வாழ்க்கையில் நேரும் ஒவ்வோர் இயக்கத்திலும் வெளிப்படச் செய்யும் வகையைப் போதித்தலுமே.

இவ்வுலகம் மூட நம்பிக்கை யெனும் தளைகட்கு உட்பட்டுள்ளது. ஆண்களாயினும்பெண்களாயினும், அடக்கப்பட்டவர்கட்காக இரக்கப்படுகிறேன். அடக்குபவர்க்காக அதனினும் அதிகமாக இரக்கப்படுகிறேன்.

உலகமதங்கள் உயிரற்றுக் கேலிகளாய் விட்டன. உலகம் வேண்டுவது ஒழுக்கமே. தன்னலமற்றதான ஒரே அன்புமயமாய் எரியும் வாழ்க்கையுடையாரே உலகிற்குத் தேவை. அந்த அன்பே ஒவ்வொரு வார்த்தையையும் இடியேறு போன்று வலிமை பொருந்தியதாக்கும்.

இறைவனை நம்பாதவனை நாஸ்திகன் என்றன பழைய மதங்கள்; தன்பால் நம்பிக்கையற்றவனை நாஸ்திகன் என்கிறது புதியமதம்.

என் வயது ஏற ஏற, எல்லாம் ஆண்மையில் அடங்கியிருப்பதாக எனக்கு மென்மேலும் தோன்றுகிறது. இது எனது புதிய உபதேசம். ஓர் ஆண்டகையைப் போன்று தீயதையும் செய்க. கட்டாயமானல் தீயோனுகவும் இரு, பேரளவிற்கு!



சுவாமி விவேகானந்தர்

முதலில் உணவு, பின்பு மதம்.

என் தேசத்துள்ள ஒரே ஒரு நாயாயினும் உணவின்றி இருக்குமளவும், எனது மதமுழுவதும் அதற்கு உணவளிப்பதேயாம்.

உனக்கு இறைவனைக் காண வேண்டுமாயின், மனிதனுக்குப் பணி செய்க.

உள்ள தெய்வம் ஆகிய ஒன்றை யான் நம்பும் அவ் ஒரே தெய்வத்தை—அதாவது, எல்லாஆன்மாக்களும் சேர்ந்த முழுமையை —வணங்கும் பொருட்டு, யான் மீண்டும் பிறப்பேனாக, ஆயிரக் கணக்கான துயரங்களையும் அனுபவிப்பேனாக.

இரக்கமின்றி வட்டி வசூல்செய்யும் உலோபிகளின் கொடுமைக்கு கீழ்ப்பட்டு வேதனையாற் புலம்புகிறது மேலையுலகம்; புரோகிதரின் கொடுமைக்குக் கீழ்பட்டு வேதனையாற் புலம்புகிறது கீழையுலகம்.

ஆன்மிக அடிப்படை இல்லையாயின், மேற்றிசை நாகரிகம் முழுமையும் அடுத்தஐம்பது ஆண்டுகளில் துண்டு துண்டாக நொறுங்கிவிடும். மனிதவர்க்கத்தினரை வாள்வலி கொண்டு அடக்க முயல்வது நம்பிக்கைக்கு வழியற்றது, முற்றிலும் பயனற்றது.

இந்தியா இன்றும் உயிரோடு வாழுங்காரணம், அது உலக நாகரீகம் எனும் பொதுக் களஞ்சியத்திற்குத் தனது சொந்தப்பங்கை இன்னும் கொடுத்தாக வில்லை என்பதே என்றறிக.

இதை நினைவிற் பதித்துக் கொள்: இந்தியா உலகிற்கு அளிக்கும் செய்தியாவது, எக்காலத்தும் 'ஆன்மா இயற்கைக்காக இருப்பதன்று, ஆனுல் ஆன்மாவுக்காக இயற்கை உள்ளது' என்பதே.

ஒருமதத்தின் இறைவன் எல்லா மதங்கட்கும் இறைவனுவான்.

ஒருமதம் உண்மையானுல், அப்போது மற்றவை யெல்லாம் உண்மையாகத்தான் இருக்க வேண்டும் ஆக,இந்துமதம் எனக்குஉடைமையாகும் அளவிற்கு உனக்கும் உடைமையாகும்.

உங்கட்கு முன்னுல் இந்த வாக்கியத்தை எழுதி வைத்துக்கொள்ளுங்கள்! 'பொதுமக்களது மதத்தைக் கெடுக்காது, அவர்களை உயர்த்தல்' என்பதை.

ஐந்நூறு ஆடவர்களைக் கொண்டு இந்தியாவை வெல்ல

ஐம்பது ஆண்டுகள் பிடிக்கலாம்; அத்தனை மாதரைக் கொண்டோ ஒரு சில வாரங்கட்கு அதிகமாகாது.

ஒவ்வோர் ஆன்மாவும் அறியாமை மேகங்களால் மூடப்பட்டுள்ள ஒரு சூரியனுகும்; ஓரான்மாவிற்கும் மற்றொன்றிற்கும் உள்ள வேறுபாடு இந்த மேக அடுக்குகளின் அடர்த்தியிலுள்ள வேறுபாடேயாம்.

வரையறை கடந்த கனவு காண்போனுன மனிதன் வரையறைக்குட்பட்ட கனவுகளைக் காண்கிறுன்!

முதன் முதலாக நாமே கடவுளராவோம்; பின்னர் கடவுளராமாறு பிறர்க்கு உதவி செய்வோம். "ஆகுக, ஆக்குக"— இதுவே உனக்கு ஒழுக்க விதியாகட்டும்.





ஆசிரியரும் வெளியிடுபவரும்: T ராமனுதன், 231, ஆழ்வார் திருநகர் சென்னை-87 அச்சிடுபவர்: கொண்டா. கா.சி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 81-6 பாண்டிபஸார், தியாகராயநகர், சென்னை-17